# சிவாஜி—ரௌஷனாரா.

## ஒரு சரித்திர வினோதகதை.



இது
"வித்யாரண்ய நகரம்," "ப்ரீதுலை", முதலியன
எழுதிய
ஆ. ரா. ஸ்ரீநிவாஸ ஐயங்கார், பி.ஏ.,
இயற்றியது.

சென்னை.
பி. வைத்தியநாத ஐயர்.
1903

விலை அணா 10. தபாற்கூலி வேறு.

# PREFACE.

"Of the five daughters of Aurangzeb, history has thought fit to give a prominent place, and literature to count as one of its devotees, his eldest princess, Zeb-un-Nisa only; and, indeed, even a superficial study of the times of that great Emperor shows what a large part she fills on the canvas of his life. The reason is not far to seek. With all his faults, the Emperor was a devout, a bigoted Mahommedan, and his daughter was as learned in the religious lore as himself. Partiality for her, having its origin in such a vital subject as religion, had gradually helped to make a spoiled child of her, to such a degree that at times she was not afraid to set the will of her father at defiance.........Latter-day historians have tried to throw a halo of romance round her, by depicting her as a pining lover, going to her grave with a passion still burning within her. Shivaji's presentation to Aurangzeb in open Durbar was watched from behind the *pardah* by the ladies of the Seraglio. Zeb-un-Nisa is said to have been struck by the comeliness of his person, and to have fallen in love with him at first sight. It is also said that news of his pride, his courage, his adventurous life, and his early exploits

in the Deccan, had already laid the mine which but a spark was needed to ignite; the spark was furnished by the haughty deportment with which Shivaji carried himself in the Diwan-e-Am......Shaistkhan's wife, a relation of Aurangzeb, had, after her return from the Deccan, never failed to urge him to capture and kill the man (shivaji)who had killed her son and wounded her husband. Aurangzeb was only too willing to accede to her wishes. But H[illegible] public opinion, as represented by the Rajpu[illegible]s at his Court, compelled him to stop short [illegible]aking the extreme step. Zeb-un-Nisa, aft[illegible]is, it is said, solicited her father to allow her to marry Shivaji, and he consented, provided the Maratha chief became a convert to Islam. This was impossible; Shivaji sometime after escaped from his prison : and Zeb-un-Nisa's uurequited and unfulfilled passion turned to poetry for consolation, where, in the saddest of songs, she is reported to have poured out her chastest and best love-lamentations."*

There has been a rage of controversy over this affair, and several theories have been rampant upon this subject. English, Mahommedan, and Maratha historians have in many instances distended their imagina-

---

*"Zeb-un-Nisa; Princess; Poetess" by Mr. Krishnalal M. Jhavari, M.A., L.L.B.

tions to one side or the other, sometimes with an extraordinary amount of Vehemence. It is true, that she was a learned and accomplished lady. Arabic, Persian, Caligraphy, Koranic studies, prose and poetry she was a mistress of. A model of virtues and a poetess of no mean fame, critics have seen in her works, the mental equipment of very superior order. "They see in it the outpourings of a heart disappointed in love, of a pure soul bereft of its companion, of a chaste woman pining away in sorrow at the impossibility of being able to secure the only desire of her life, veiled in the imagery of the *bulbul* and the rose, of the rose garden and the Saki, of the celebrated pair of lovers, Laila and Majnun"*. What was the real fate of the princess no body is in a position to say. Grant Duff the historian of the Marathas, has not a single word about it. But, all historians agree, that Shahu, Sivaji's grandson was taken care of by Rowsenara†. One historian states that the passion which she had at an early age was still burning within her, and when Sambaji was beheaded, the flame in her began to rage, and as a *magnum opus* of her life she volunteered to tend and bring up the child. Justice Ranade has nothing to say about it.

* "Zeb-un-Nisa; Princess; Poetess;" by Mr. Krishnalal M. Jhavari, M.A., L.L.B.

† Another name of *Zeb-un-Nisa*.

On the other hand, some English Historians, have taken up the discussion. Orme pooh-poohs the idea, stating as his reason that the figure of the Maratha chieftan was extremely repellant, and that a lady, especially a royal one, would never have condescended to have fallen in love with him. Sir James Mackintosh eloquently records his belief in the love of Zeb-un-Nisa for Shivajee; and Mr. Jam[illegible] Douglas charmingly impresses on the mind [illegible] reader, the absolute truthfulness of the f[illegible] [illegible]stly, the only authority that sorght to mak[illegible] [illegible]oroughly historical is Colonal Dow.

Be the fact what it may, it is true that Sivajee "feigned sickness, sent for physicians, took medicines, and was soon reported very ill. Pretending to have partially recovered, he gave great charities to Bramins and presents to physicians. He made up several long baskets, which were daily sent from his apartments filled with sweetmeats, to the houses of different great men his acquaintances, or to be distributed among fuqueers at mosques.......He got into a basket himself and was than conveyed by his domestics beyond the guards, to an obscure place were he could get out unseen...............Sivajee's escape was not known until a late hour on the following day. His party as well as himself escaped, in the disguise

of Gosaeens; they visited several places of religio resort. Sivajee did not throw off his disguise until h arrival at Raigurh, which he reached in Decemb 1668, after an absence of nine months.*

The introduction of Sultan Mauzam in the ro ance, is not out of place. "Sultan Mohummed Ma zam was, in many respects, a prince of an excella disposition; he was brave, generous, and confidin but with the defects which some of these qualiti unrestrained may engender; he was fond of pleasur lavish, easily persuaded.......Sivajee did not decei himself in supposing that gold might effect muc with persons of this Charactor; and he accordingl used it with no sparing hand"$

In some form of other, this incident has forme the subject of many a novel and drama in many of th Indian Vernaculars. The love story has been beaut fully dramatised in Bengal. And I have made it th subject of my novel. In the spinning of the stor I have deviated very much from history. The gran Maratha cheiftain, and the Moghul Emperor ar I am sure for the first time introduced to Tamil reader

* "History of the Mahrattas", by Grant Duff.

$ ibid.

Apart from its interests as a story, I am sure, this romance will help them to glean something of the history of their land during the 17th century.

I have to thank Messers. V. G. Suryanarayana Sastriar B. A. Head Tamil Pandit, Madras Christian College, and K. V. Veeraraghava Chari for having revised the proofs, while the work was going through the press.

Madras } C. R. SREENIVASA AIYANGAR.
7-3-08 }

---

# சிவாஜி-ரௌஸினாரா.

## அத்தியாயம் 1.

### எதுசெய்வேன்?

உலகத்தில் எவ்வஸ்துவுக்கும் ஒருபொழுது பெருமையும், ஒருபொழுது நாசமு முண்டென்பது நிச்சயம். செல்வமும், பெருமையும், உயர்ந்தோங்கிய மாளிகைகளையும், பளபளவெனப் பிரகாசிக்கும் தங்கம், வெள்ளி, விலையுயர்ந்த கற்கள் முதலியவை கொட்டிக்கிடக்கும் கடைவீதியையு முடையதான டெல்லி என்னும் பட்டணம் தற்காலத்திலு மிருக்கிறது. பெருமையாய் விளங்கிய அநேக பட்டணங்கள் அடியோடு அழிந்திருப்பதை நாம் அறிவோம். ஆனல் டெல்லிமாத்திரம் உயிர்போன உடலை யலங்கரித்து வைத்தாற்போன்று இன்னும் மாடமாளிகைகளோடு செல்வம் நிறைந்தது போலக் காணப்படுகிறது. எப்படிச் செல்வ மிருக்கும்? எத்தனை யரசர்கள் வந்து கொள்ளையிட் டிருக்கிறார்கள்? எவ்வளவு, போயும் குபேர பட்டணம்போன்று மேன்மேற் செல்வம் வளர்ந்து கொண்டிருப்பது போலக் காணப்படுகிறது. ஆனல், இதுமாத்திரம் சத்தியமாய்ச் சொல்லலாம். முன்னிருந்த செல்வத்தில் நூற்றில் ஒரு பாகங்கூட இப்பொழுது டெல்லிப் பிரஜைகளிடம் இல்லை. டெல்லி அமைக்கப்பட் டிருக்கும் இடமோ, வெகு

முமானது. அதன் சிதோஷ்ணமோ, தேகத்திற்கு சௌக்கி த்தை விளைவிக்கக் கூடியதே தவிர வேறில்லை. அதன் காயில்களும், கோரிகளும், சலவைகற்களாலாய கட்டி டங்களும், செல்வம் நிரம்பிய மாடங்களும், மனிதனுலுண் ான தென்பதை அதை ஆதியிற் பிரதான நகரமாகவைத் ரக்கொண்டிருந்த சந்திரகுலத் தரசர்களாகிய பாரதவீரர் ளே அறிந்திருக்கலாம். ஆகையால் அவையெல்லாம் அழி துபோகு மென்பதும் நிச்சயமாய் அவர்களே யறிந்திருக் க்கூடும். பட்டணத்தைப் புதிதாய்ப் பார்ப்பவர்கள் அதைப் பார்த்துப் பார்த்து மனிதனுக்கும் இவ்வளவு சக்தி உண்டா லனத் தயங்கி நிற்பார்கள். பின்வந்த துருக்க வரசர் ளோ முன்னிருந்ததிலும் பதின்மடங்காக அந்நகரத்தை மைமைப் படுத்தினார்கள். சக்கிரவர்த்தியின் அதிகாரமெ ங்கு செல்லாதிருக்கும்? எந்த எந்த ஊர்களில என்ன ன்ன உயர்ந்தனவா யிருக்கின்றனவோ, அவையெல்லாம் டெல்லிக்குவந்துசேரவேண்டியது. ஆனால் இவ்வளவுபெரிய ாரியமெலலாம் செய்து, மனதிலும் ஹிருதயத்திலும் பெரி யார்கள், உலகத்தைவிட்டு விண்ணுலகம் சென்றார்கள். அவர்கள் செய்தகாரியங்களும் அவர்கள் அடைந்த கதி யையே யடைந்தன.

மெதுகதை டெல்லியின் தங்கவாசலண்டை தொடங்கு றது. தங்கவாசலென்பது பொய்யன்று. நிஜமாகவே தங் த்தாற் செய்த வாசற்படி டெல்லிக் கோட்டையின் கிழப் றத்தில் வைத்தமைக்கப் பட்டிருந்தது. வெகுநாளாயிரு ததால்களமானதும், பார்வைக்குச்சற்றும் இடங்கொடாத

கோட்டைச் சுவர்கள் அக்பர் சக்கிரவர்த்திநாளில் பின்னும் நன்றாகக் கட்டப்பட்டது. ஜயத்தைக்குறிக்கும் ஓர் வளைவு வாசற்படியா யிருந்தது. அதன்பேரில் அநேகசித்திரங்கள் எழுதப்பட்டிருந்தன. அவ்வளைவின்பேரில் ஜயலக்ஷ்மியது ஓர் உருவம் கற்சிலையினால் செய்துவைக்கப் பட்டிருந்தது. அவ்வுருவத்தின் பக்கங்களில் நான்கு பெரிதான சண்டை இயந்திரங்கள் வைத்திருந்ததை உள்நுழைவோர் எல்லோரும் பார்த்திருக்கலாம். தரைமட்டமிருந்து வளைவின் உச்சி வரையில் சுமார் இருபத்தைந்து அடி வுயர மிருக்கலாம். வளைவின் உள்ளே யெல்லாம் சிற்சில இடங்களில் கல்லில் வேலைசெய்து அநேக உருவங்கள் வைக்கப்பட் டிருந்தன. அவ்வாசற்படியண்டை இரண்டு பீரங்கிகள் தரைமேல்வைக்கப்பட்டிருந்தன. எட்டுகாவற்காரர்கள் துப்பாக்கிகளுடனும், கத்திகளுடனும் காவற்காத்துக் கொண்டிருந்தார்கள்.

அஸ்தமய மாகவே எட்டு காவற்காரர்களும் கோட்டைக்கதவைப் போட்டுவிட்டார்கள். உள்கதவு மாத்திரம் யாரேனும் நாட்டில் பெரியோன் வெளியேயிருந்து உள்ளே போவதற்கு, திறந்துவைக்கப்பட் டிருந்தது இப்பொழுது எட்டுப்பெயர்களுமில்லை எழுவர் வீடுபோய் விட்டார்கள். ஒருவன் மாத்திரம் வாசற்படியண்டை கத்தியை விளையாட்டாய் தலைமேற் சுற்றிக்கொண்டு இங்கு மங்கு மலைந்து கொண்டிருந்தான்.

இப்படி இவன் இருந்துகொண் டிருக்கையில் கோட்டைக்குப் பத்து மைலுக்குத் தெற்கே, ஒருவன் குதிரைமேல் சவாரி செய்துகொண்டு வந்தான் அவன்முகம் மிக

வும் வாடியிருந்தது. வியர்வையை அடிக்கடி துடைத்துக் கொண்டிருந்தான். தலைமேல் மிகஉயர்ந்த பட்டாற் கட்டிய தலைப்பாகையை போட்டுக்கொண் டிருந்தான். உடம்பிலும் பட்டாலாயசட்டை போட்டுக்கொண்டு, உள்ளே போட்டிருந்த வெள்ளை நூல் மெய்ப்பையைக் காண்பித்தான். அரையில் கரிய கம்பளியாலாய ஒருகாற் சட்டை தெரிந்தது. அவன் உடையை நன்றாக உற்றுநோக்கினால், மிகத்தூசியடைந்தெனத் தெரியும. குதிரையும் மிகமெலிந்ததாயிருந்தது. அவன்கூட ஒருவருமில்லை. அவன் சற்று சற்று அவன் அறியாமலே கண்ணீர் விடுவான். நீர்த்துளி தன்மேல் விழவும் திடீரெனத் தூக்கத்திலிருந்து விழிப்பவன் போன்று எழுந்து, முகத்தைத் துடைத்துக்கொண்டு, மறுபடியும் குதிரையை வேகமாய்ச் செலுத்துவான். அவன் அரையில் வாள் ஒன்று பையினுள்ளே தொங்கிக்கொண் டிருந்தது. நேரமாய்விட்டதே யென்று அவனுக்கு மனக்கலக்கம் அதிகரித்துக் கொண்டே யிருந்தது. அவனுடைய தேகம் மெல்லியதாயும் கட்டுண்டதாயும் இருந்தது. அவன்பார்வைக்கு அழகுடையா னில்லாவிடினும், மனதைக் கவரும் வண்ணத்தை உடையனா யிருந்தான். அவன் முகம் நீண்டு வாடியதா யிருந்தது. கூர்மையான மூக்கையும், பளபளவென்றுமின்னி அவனுடைய உயர்ந்த ஆன்மாகாந்தியை வெளிப் படுத்துவ மாயக் கண்களையும, சிவந்த உதட்டையுமுடையவீரன், ஏதோ துக்கத்தை அனுபவித் திருப்பதாகக் காணப்பட்டான். அவன் கறேலெனக் கருத்த அழகிய மீசையை உடையவன். கைகளிரண்டும் நீண்டு மெலிந்தாயிருந்தன. எவ்வளவோ யோசனையி லாழ்ந்திருந்த இவனி

இருட்டி, ஒருமணிநேர மான பிறகு, டெல்லி வாசலண்டை வந்துசேர்ந்தான். அரைமைல் தூரத்திலேயிருந்து பார்க்கும் பொழுதே ஒரு சிறிய வெளிச்சங்காணப்பட்டது. அவ்வெளிச்சத்தின் மார்க்கமாகவே நமது வீரன் வந்தான். கீழ்க் கோட்டை வாசலண்டை வந்து சேர்ந்தான்.

கோட்டைவாசலுக்குக் கூப்பிடுதூரத்திலேயே நமது வீரன் குதிரையினின்றும் கீழே யிறங்கிவிட்டான். வாசலண்டை வரும்பொழுது, குதிரையைநடத்திக்கொண்டு, தானும் கூடவே வந்தான். கதவோ மூடியிருந்தது. உள்ளே ஒரு சிறு வெளிச்சம்மாத்திரம் காணப்பட்டது. யாரோ ஒருவன் நடக்கும் சப்தம் மாத்திரம் இவன் காதிற் கெட்டியது. என்ன செய்வான்? தான் உள்ளேபோய்விடலாமென்றாலோ, குதிரையை எங்கேவிட்டுப்போவது? குதிரையை விட்டுப் போவதா? அதைச் சொப்பனத்திலும் நினைக்கலாமா? டஷ்! சேவகனைப்போய் இனிமேல் கதவைத் திறப்பானு கேட்போம். இவ்வாறு தனக்குத் தானே யோசித்துக் கொண்டு, குதிரையை ஒரு மரத்திற் கட்டிவிட்டு மெல்ல மெல்ல வாசற்படியண்டை வந்து நின்றான். இவன் வரும் சப்தங்கேட்டு, உள்ளேயிருந்த காவலாளன், விளக்கையெடுத்து உள்கதவு வழியாக வெளிச்சத்தை வெளியே நீட்டிப் பார்த்தான். நமது வீரனைக்கண்டான். உடனே வெளிச்சத்தை கீழே வைத்துவிட்டு, முன்போல உலாத்திக்கொண்டிருந்தான்.

நமது வீரன் மனம் மிகவும் புண்ணாகிவிட்டது. தன்னைப்பார்த்தவன் உள்ளே அழைப்பானென்று நினைத்த

மாத்திரமே அந்நினைவு பொய்யாய்விட்டதே! ஆயினும் அவனைக் கேட்டுப்பார்க்கலாமோ வென்று.

"ஐயா! கோட்டையினுள்ளே, யானும் எனது குதிரையும் போகவேண்டுமே" என்றான்.

காவலாளன் பேசவில்லை.

"காதில் படவில்லையோ?"

காவலாளன் சற்று நின்றான். அப்புறம் முன்போல உலாத்த ஆரம்பித்தான்.

மதுவீரனுக்கு ஆகாரம்கிடைத்து இரண்டுநாட்கள் ஆயின. குதிரையை மரத்தில் கட்டிவிட்டு உள்ளேபோய் ஒரு நொடியில் சாப்பிட்டுவிட்டு வரவேண்டுமென்ற ஆவலுடனிருந்ததனால், மறுபடியும்,

"நானாவது உள்ளேபோய்விட்டு வரலாமா?" என்றான்.

இவ்வளவு நேரம் சும்மாவிருந்த காவலாளன்,

"யார் அப்பா! இந்நேரம் கழித்து உள்ளேபோக வேண்டுமோ?" என்று சொல்லி, நகைத்தான்.

"என் கதி நகைக்கத்தக்கதுதான்" என்று மதுவீரன் தனக்குத்தானே நினைத்துக்கொண்டு,

"ஐயா! உள்ளேபோய் ஒரு நொடியில் சாப்பிட்டுவிட்டு வந்துவிடுகிறேன்" என்றான்.

"சும்மா பேசாதே."

"என்ன ஐயா!"

"உள்ளே போகக்கூடாது."

"ஏன்?"

"மஹாராஜ் உத்திரவு".

"நான் பசியில் வாடியிருக்கிறேன். கொஞ்சம் தயவு செய்."

"சட்!"

"கோபம் வேண்டாம்."

"இனி பேசினால் வாளால் வீசிவிடுவேன்."

"என்னிடமும் வாளிருக்கிறது ஐயா!" என்று மிக வெறுப்புடன் செப்பினான் நமது வீரன்.

"ஹா! ஹா!! ஹா!!! பசியென்றாயே! ரக்தம் நிரம்ப இருக்கின்றாற்போலிருக்கிறதே?"

"நான் உன்னைப்போல் இழிகுலத்தோனல்லன்."

"போக்கிரி!"

"அப்பா! சும்மாவிரு" என்று வாளை ஓங்கினான்.

உடனே காவலாளன் படைசெரனக் கதவைச் சார்த்திக் கொண்டான்.

நமது வீரன் மனம் தளர்ந்துபோய் சற்றுதூரத்திற்கப் பாலுள்ள ஒரு சுமைதாங்கியின்மேல் ஏறி உட்கார்ந்தான். பசி வயிற்றை கிள்ளிக்கொண்டிருந்தது. வெகு தூரம்சவாரி செய்திருக்கிறான். தனது கதியை நினைந்து மிகவும் வருந்தினான். தான் பிறந்ததுமுதல் அநுபவித்திருந்த துன்பங்களெல்லாம் ஒன்றொன்றாய் அவன் மனத்தின் முன்வந்து நின்றன. தன்னையறியாமல் அவன் கண்களைத் தூக்கம் வந்து கவர்ந்துகொண்டது. சுமைதாங்கியின் மேல் உட்கார்ந்தபடியே தூங்கினான்.

பொழுதுவிடிந்து இரண்டுநாழிகை சென்றபின் சூரிய கிரணம் அவன் மேற்பட்டது. அப்புறம் எழுந்து உடம்பைக் குலுக்கி, சோம்பல் முறித்துவிட்டு, மரத்தடியில் நின்று கொண்டிருந்த குதிரையை யவிழ்த்து, கோட்டைவாசற்படி வழியாகவே உள்ளே சென்றான். கோட்டைக் காவலாளனாவது, நமது வீரனாவது ஒருவரையொருவர் அறிந்து கொள்ளவில்லை. அநேகம் தெருக்களின் வழியாகப்போய், காராகிருகத் தண்டையிருந்த ஒரு சிறிய வீட்டின் வாசற்புறத்தில் நின்று கொண்டிருந்த ஒரு வேலைக்காரனிடம் குதிரையை ஒப்புவித்து விட்டு, உள்ளே சென்று மாடத்தின் மேலேறியதும், அங்கிருந்த மஹாராஷ்ட்ராதிபதியாகிய [illegible] பார்த்து, அவனைக் கட்டிக்கொண்டான். இருவரும் ஆனந்தக்கண்ணீர் பெருக்கினார்கள்.

"தம்ணாஜி! நான்படும் துயரத்துக்கு அளவில்லை" என்றுசொல்லும் பொழுது சிவாஜி கண்ணினின்றும், இரண்டு சொட்டு ஜலம் கீழே விழுந்தது.

"மஹாராஜ்! எல்லாம் சரியாயிருந்துகொண்டிருந்தது. நேரம் வருமளவும், இராஜ்ஜியத்தை நன்றாக காத்துக்கொண்டு வருவார்கள்."

"தம்ணாஜி! மனம் குளிர்ந்தது. நீ போய் பூஜை முதலியன செய்து சாப்பிட்டுக் களைப்பாற்றிக் கொள்."

"அப்படியே! மஹாராஜ்!" என்று சொல்லிவிட்டு தம்ணாஜி போய் விட்டான்.

## அத்தியாயம் 2.

## படைப்பிரயாணம்

---

"ரகுநாத்! வலையிலன்றோ சிக்கிக் கொண்டோம்! நான் ஒருவரையும் நம்புவதேயில்லை. இது வரைக்கும் நான் வெகு ஜாக்கிரதையாகவே யிருந்துகொண்டு வந்தேன். இப்பொழுது துருக்கனிடமன்றோ அகப்பட்டுக் கொண்டேன்! இவன் இனி நம்மை விடமாட்டான் போலிருக்கிறதே! இன்னும் எவ்வளவுதான் பணிந்து கொடுக்கலாம்! எல்லாவற்றையும் பற்றி, நீ விவரமாய் எடுத்துரைத் திருக்கிறாயல்லவா? அவன் பதிலொன்றுஞ் சொல்லாமல், பார்ப்போமென்றான். பார்ப்போமென்று சொல்லியும் பத்துநாட்களாயினவே! தப்ப வழி யொன்றுமே யில்லை. எங்கேயும் காவல் வைத்திருக்கிறான். நாம் பேசுவதையும் யாரேனும் கேட்டுக்கொண் டிருப்பாரோ என்னவோ? என்னுடைய புத்தியீனம். நாமொன்று நினைக்க, தெய்வமொன்று நினைத்தது. ஆனால், அப்போழுதிருந்த சமயம், வேறு எவ்விதமாகவும் வழி கொடுக்கவில்லை' மனமோ வெகு குழப்பமா யிருக்கிறது. பவானி! அம்மணி! நீதான்துணை! ராமா! பக்தவத்சலா! நீயேதுணை! நீதான் என்னைக் காக்க வல்லவன்." என்று மிக மனவுருக்கத்துடன் மஹாராஷ்ட்ர வீரனாகிய சிவாஜி, ரகுநாத் பண்ட் என்னும் தன்னுடைய மந்திரியினிடஞ் சொன்னான்.

" மஹாராஜ்! சற்று முன்னே ஒரு ஆள் வந்து, தம்முடன் கூடவந்திருப்பவர்கள் ஊர்போய்ச் சேரலாமென்று அவுரங்க சீப் ஆஞ்ஞாபித்ததாகச் சொன்னான்.'"

" என்ன ? "

" தங்களை மாத்திரம் இங்கு வைத்திருக்க அவர்களுக்கு கட்டளையாம். "

" ரகுநாத்! நிரம்பச் சந்தோஷமாச்சுது. நீ புறப்பட்டுப்போ. நான் வரும் வரையில் இராஜ்ஜியத்திற் கலக மில்லாமற் பார்த்துக்கொள். நான் எப்படியாவது தப்பித்தோடி வந்து சேருகிறேன். "

" எப்படி? "

" அது ஏன் உனக்குக் கவலை? நான் சமீபத்தில் அவ்விடம் வந்து சேருகிறேன். "

" நாங்கள் இளைய ராஜாவையும் அழைத்துச் செல்லலா

" நீங்கள் ஒருவரும் இங்கிருக்கவேண்டாம். தம்ணாஜியை வைத்துக்கொண்டு எனது காரியங்களை நடத்திக்கொள்ளுகிறேன் நானே இவனிடம் சிக்கிக்கொள்ளுவது? "

உடனே சிவாஜியுடன் கூடவந்த ஐந்நூறு குதிரைப்படையும் 1600 காற்படையும் பயணத்துக்கு ஆயத்தப்படுத்திக் கொண்டிருந்தன. எல்லோரும் பயணத்துக்கு வேண்டியவைகளை யெல்லாம் சேகரித்துக் கொண்டிருந்தார்கள். ஒருவனுக்கும் தங்கள் எஜமானை விட்டுப் போகவே மனம் வரவில்லை. ஆனால் என்ன செய்யலாம்? அவரே போகச்

சொல்லிவிட்டார். ஆகையால், சஞ்சலமனத்துடன் எல்லோரும் தங்கள் அரசனிடம் நேரே விடைப் பெற்றுக்கொண்டு போனார்கள். சிவாஜியின் வேலைக்காரர்களில் இருவரும், குதிரையாட்களிலிருவரும் மாத்திரம்,சிவாஜியுடனிருந்தார்கள். திரும்பிப் போவோரை இராஜ்ஜிய எல்லைமட்டும் கொண்டுபோய்விட அவுரங்கசீப் தனது சேனையின் ஒருபகுதியை யனுப்பினான்.

## அத்தியாயம் 3.

### என் கண்ணே!

---

பொழுது விடிந்து பொழுது போகும் வரையில், சரியாய் ஆகாரங்கூடக்கொள்ளாமல், இப்படியே நினைந்து நினைந்து, ஒருவழியும் அகப்படா திருந்தது. சிவாஜியுடன் அவனைச்சேர்ந்த நால்வர் தவிர வேறெவரு மில்லை. அவுரங்கசீபையோ ஊரிலிருந்து சேனையை வரவழைத்து வென்று தப்பியோடக் கனவிலும் நினைக்கக் கூடாது. மேலும், சேனையையிங்கு வரவழைத்து விட்டால், பீஜபூர் அரசனாகிய தருக்கன் உடனே மஹாராஷ்ட்ர விராஜ்ஜியத்தின்மேற்பாய்ந்து அதைச் சின்னபின்னமாக்கி விடுவான். அவுரங்கசீப் சிவாஜியை ஊருக்குள் தன்னிஷ்டப்படி யிருக்கலா மென்று சொன்னான் எங்கே சிவாஜி சென்றாலும், அவனறியாமலே இவர் கூடவே வந்துகொண் டிருந்தார்கள். ஆனால், சிவாஜி நிரம்பப் புத்திசாலி யாகையால், இவ்விதம் அவுரங்கசீப் கடந்து கொள்ளுவா னென்பதை யறிந்து, எங்கே போனா

னும் அவுரங்கசீபையே ஸ்தோத்திரஞ் செய்துகொண்டிருந்தான். ஊரிலுள்ள ஜாகீர்தார்கள், நவாப்கள், இராஜ்ஜியத்தில் உயர்ந்த உத்தியோகஸ்தர்கள் முதலியோரை யெல்லாம் சிநேகஞ்செய்து கொண்டான். சிவாஜியைப் பார்த்த மாத்திரமே யாவருக்கும் அவன்மேல் அன்பு விழுந்துவிடும். அவன் யாவர் மனத்தையுங்கவர வல்லவன்.

இவ்வாறிருக்குந் தருணத்தில், அவுரங்கசீபின் சேனாதிபதியாகிய ஜெயசிங்கை, அடிக்கடி பார்த்ததினால் அவனுக்கு இவனிடத்தில் ஒருவித நேசமுண்டாயிற்று. சிவாஜி எப்பொழுது சமயம் வாய்த்ததோ, அப்பொழுதே, அதை உபயோகப்படுத்திக் கொள்ளுவான். ஜெயசிங்கு தன்னிடம் பிரியமா யிருக்கிறானென்பதை யறிந்து, சிவாஜி அவனிடம் இலவிஷயங்களைப் பற்றிப் பேசலாயினன்.

"மஹாராஜ்! உங்களைத் தவிர வேறு துணையெனக்கில்லையென்பது உங்களுக்கே தெரிந்திருக்கலாமே!" என்றான் சிவாஜி.

"என்னை மிரம்ப மரியாதை பண்ணுகிறீர்கள்."

"நான் சொல்லுவது சத்தியம்"

"ஆனால் சரி"

"இன்னும், உங்களிட மிருக்கும் பெருந்தகைமை, நம சக்கிரவர்த்தி யிடங் கூடவில்லை."

"மெய்!"

"மஹராஜ்! நாமிருவரும் க்ஷத்திரியரென்பதையும், தாங்கள் பெருமையுடையரென்பதையும் நம்பி இவ்வாறு பேசலாயினேன்."

"அவருடைய வேலைக்காரனன்றோ நான்!"

"இப்பொழுது—ஆமாம்."

"எப்பொழுதும்" என்று மீசை துடிக்கப் பேசினான்.

"மஹாராஜ்! என்மேற் கோபம் வேண்டாம். நமது முன்னோர்கள் தங்கள் தங்கள் இராஜ்ஜியங்களை யாண்டுவரும்பொழுது, தமது சந்ததி பிறனிடம் ஊழியஞ் செய்யவேண்டுமென்று நினைத்தார்கள்? ராக்ஷஸபிசாசர்களை வென்ற, இராமாயண காலத்து வீரர்களும், சீனம், பாரசீகம், காந்தாரம் முதலிய தேசத்தரசர்களை வென்ற அர்ச்சுன ப்ரவிருத்திகளும், சாகர்களை ஹதஞ்செய்து சாகஹரியெனப் பெயர்வாங்கின சாகஹரியாகிய விக்ரமாதித்யனும், இன்னும் சமீபத்தில், விஜய நகரத்தை ஏற்படுத்திய வித்யாரண்ய ஹரிஹராதிகளும், தமக்குப்பின் வந்தோரெல்லாம் பிறர்கையிலகப்பட்டு பிராணனைவிடவேண்டுமென்று நினைத்தார்கள்?"

ஜெயசிங்கு சும்மா விருந்தான்.

"மஹாராஜ்! தயவுசெய்ய வேண்டும். ஒரு சிறு உதாரணமெடுத்துச் சொல்லுவேன். தங்களுடைய வெண்ணத்தைத் தான் வெளியிட்டு விட்டீர்கள். தங்கள் புதல்வர் தம் நாட்டில், தமக்குமேலெவரு மில்லாதபடி இராஜ்ஜிய பாரம் பண்ணிவந்தால், தங்கள் மனதுக்கு அது எவ்வளவு ஆனந்தத்தை விளைவிக்கும். உலகத்தில், சாதாரணமாய் நடந்து வருவதென்னவென்றால்? தாம் உயர்ந்த நிலையிலில்லாமற் போனாலும், தமக்குப் பின்வருவோராவது மேற்படியிலிருக்கும்படி செய்யவேண்டுவதல்லவா?"

இப்பொழுது ஜெயசிங்கு தலையைக்குனிந்துகொண்டு கைமோதிரத்தைச் சுற்றிப்பார்த்துக்கொண்டிருந்தான்.

"இன்னுங் கேளுங்கள். நான் அவுரங்கசீபுக்காக பய ந்து, இங்குவந்து இவ்விதம் அகப்பட்டுக்கொண்டே னென்று நினைக்கவேண்டாம். எனக்கு அவனிடத்தில் பயமேயில்லை" இப்பொழுது சிவாஜி கண்ணினின்று இரண்டு மூன்று நீர்த் துளிகள் தரையில் விழுந்தன.

"உங்களிடம் பயந்து தான் நான் பணிந்தேன்' என்று சொல்லி நிறுத்தினன்.

இருவரும் அரை நாழிகைப் பொழுதுக்குச் சும்மா விருந்தார்கள். மறுபடியும், சிவாஜியின் வருமாறு சொன் ஞன்.

"மஹாராஜ்! எனக்குப் பிறந்தது முதல் எனது செவி லித்தாயாகிய பவானியம்மை அடிக்கடி வந்து என்னைக்கண் டித்திருக்கிருள். 'பிறனிடம் இராஜ்ஜியத்தைக் கொடுத்து விட்டு தெய்வத்தை யெல்லாம் மறந்த பாவிகளை யெறிந்து விட்டாலென்ன?' என்று என்னைக் கேட்டாள். நான் என்ன செய்வேன்? நான் கதறி யழுதேன். இப்பொழுதும் அழும் படிதான் அம்மை செய்துவிட்டாள்."

"ஐயோ! எனக்கு ஒன்றும் தோற்றவில்லை" என்ருன் ஜெயசிங்கு.

"மஹாராஜ்! நான் தங்களுக்குச் சொல்ல வேண்டிய தொன்றுமே யில்லை. நான் என்னவோ தொடங்கினேன். நீங்களெல்லோரும் கூடியிருந்து உதவிசெய் வீர்களென நினைத்தேன். என் நினைப்பெல்லாம் வீணுகப் போய் விட்டது."

"நான் எப்படி உதவிசெய் திருக்கக்கூடும்?"

"உதவிசெய் திருக்கலாம்."

"எப்படி? நான் துருக்கன் வேலைக்காரனாகிவிட்டேனே!"

"போனது போகட்டும்; இனிமேலாவது—"

"நான் என்ன செய்யக் கூடும்?"

"என்னை ஊர்போய்ச் சேரும்படி உதவி புரியலாம்."

"அஃதெப்படி?"

"அவுரங்கசீபிடம் பேசி."

ஜெயசிங்கு மனம் நிரம்பவும் புண்ணாகிவிட்டது. அவன் முகம் சிவந்து வியர்வை நிரம்பியதாயிருந்தது. ஏனெனில் அவுரங்கசீபினது எண்ணம் முழுவதையுமவன் அறிந்திருந்தான். சிவாஜியை வரவழைத்த பொழுதே கபடமாக வரவழைத்தான். பிறகு அவனைக் கபடமாகச் சிறைப்படுத்தினான். பிறகு சிவாஜி ஏதோ பிசகுசெய்தானென்ற வியாஜத்தினால், அவனைக் கொன்றுவிட வேண்டுமென்றவெண்ணங்கொண்டிருந்தான். ஜெயசிங்கு, அவுரங்கசீப் மனமறிந்தவனாகையால், அவனுக்கு ஒன்றுஞ் சொல்லத் தெரியவில்லை.

"தாங்கள் கூட அவனிடம் பேசமுடியாதா? என்ன?" என்றான் திரும்பவும் சிவாஜி.

இப்பொழுது, ஜெயசிங்குக்கு அநேகம் தேள்கள் அவன் மனதைக் கொட்டுவது போலிருந்தது. என்ன சொல்லுவான்? ராஜபுத்திர வீரனாகையால், பொய்பேசி, பொய்யாசை காட்டுவதற்கு அவனுக்கு இஷ்டமேயில்லை, ஆதலின் சற்றுநேரம் யோசித்து,

"ஐயா! அந்தத் துருக்கனிடம் போகவேண்டாம். நாமாகவே ஏதேனுமோர் ஏற்பாடு செய்து விடுவோம்".

"எப்படி?" என்றான் முகமலர்ந்த சிவாஜி."

"நான் யோசித்துச் சொல்லுகிறேன்."

"சரி; மஹாராஜ்!"

ஜெயசிங்கு, அரண்மனைக் கடுத்தாற்போ லிருக்கும் தனது அறையிலுட் கார்ந்துகொண்டு பேசிக்கொண் டிருந்தான். சிவாஜி உள்ளே வந்ததும், வாசற்காவலாளனை யாரா யிருந்தாலும், எக்காரிய மிருந்தாலும், ஒருவரையும் உள்ளே விடவேண்டாமென்று உத்திரவுகொடுத் திருந்தான். மேற்கூறியவாறு இவர்கள் இரகசியமாகப் பேசிக்கொண்டிருக்குந் தருணத்தில், அரண்மனையின் மேன்மாடத்தினின்றும், ஜன்னலின் வழியாக இவர்களறியாதபடி. ஒருத்தி இவர்களையுற்றுநோக்கிக்கொண் டிருந்தாள். ஜெயசிங்கை யவளுக்கு நன்றாகத்தெரியும். கூடப்பேசிக்கொண் டிருப்பவன் யாரென்று தெரியவில்லை. அவனைப் பார்த்துக்கொண்டே ஸ்தம்பம்போல் நின்றுகொண் டிருந்தாள். அவள் முகத்தின்மேற் போட்டிருந்த துணி கீழேவிழுந்துவிட்டது. ஒரு கையால் ஜன்னற்கம்பியைப் பிடித்துக்கொண்டு, முகத்தை இருப்புக்கம்பிகளின்மேற் பதியவைத்து, தன்னைமுழுவதும் மறந்து அவனையே உற்றுநோக்கிக் கொண்டிருந்தாள்.

சிவாஜி எழுந்து ஜெயசிங்கிடம் விடைபெற்றுக் கொண்டு போய்விட்டான். இவளும் ஜன்னலண்டையிருந்து சென்றாள். தனது பட்டுமஞ்சத்தின் மேல், அங்கம் ஆடை [illegible] போனவழி தெரியாது, புரண்டுகொண்டிருந்தாள். அவன் உருவமே அவள் கண்ணெதிரில் நின்றது.

"அவன் யார்? அவன் யார்? அவன் யார்!" என்று தனக்குத் தானே அடிக்கடி கேட்டுக்கொள்ளுகிறாள். உடனே அலங்கோலமாயெழுந்து, தனது தாதியைக் கூப்பிட்டு, "ஒருவருமறியாதபடி, ஜெயசிங்கவர்கள் காவற்காரனிடம போய் அவரோடு இந்நேரம பேசிக்கொண்டிருந்தது யாரெனவிசாரித்து ஒருநொடியிற் திரும்பிவா," என்றனுப்பினாள் அவளும் மிக வேகமாய்ச் சென்றாள்.

வேலைக்காரி உடனே வெளியே யோடி, தீரவிசாரித்து மந்திரியவர்களுடன் வநது பேசிககொண்டிருந்தது, தற்காலம் அரசனால் சிறையில் வைக்கப்பட்டிருககும் மஹாராஷ்ட்ர வீரனென்றறிந்து, திரும்ப வோடிவந்து அச்செய்தியை அம்மாளிடம தெரிவித்தாள்.

"நீ புறப்பட்டுப் போகலாம்; உனக்கு இங்கு காரியமில்லை" என்று சொலலி வேலைக்காரியையனுப்பிவிட்டாள்.

இப்பொழுது முன்னிலும் பதின் மடங்கு அவளுக்கு மனங்கலங்கிறது. "அம்மா! இனியென் செய்வது? அவனோ வேறு ஜாதியைச சேர்ந்தவன். அதுவும் தன் தந்தையால சிறையிலடைக்கப்பட்டவன். அநதோ! அவன் வீரந்தான், என்ன? எவ்வளவு தடவை எத்தனை யரசர்களைச் சமயத்துக்குத்தக்கபடி வென்றிருக்கிறான்! இவன் புத்தியையும் வீரத்தையுமபற்றி வெகு நாட்களுககு முன்னமே கேள்வியுற்றிருக்கிறேன். என்ன ஜென்மம் பெண் ஜென்மம்! இன்னும் இருக்கபபெண்ணா யிருப்பதைவிட தற்கொலை புரிந்து கொள்ளலாம். வீட்டை விட்டு வெளிக்கிளம்பக்கூடாதாம், எப்பொழுதும இருட்டிலேயே யடைபட்டிருக்கவேண்டுமாம். எனது தகப்பனார் என்னிடத்தில் மிகுந்த அன்புகொண்டவர்தாம. ஆனால் அவர் நான் நினைக்கும் எ

ரியத்துக்கு இடங்கொடுப்பாரோ? இது செய்தி அவர் கா திற் கெட்டியவுடனேயே, எனது பிராணன் போய்விடுமே. ஆ! என்ன செயவேன்? அவனைப் பார்த்தவுடனே என் புத்தி இவ்விதம கலங்கிவிட்டதே! அவனிடத்தில என்ன தான் இருக்கிறதோ! தெய்வத் தனமோ! வேறு ஜாதி யானென்பனோ? வேறு ஜாதியாயிருந்தாலென்ன? அவனு க்கு வேறு உடலிருக்கின்றதெனறுபோலிருக்கிறது. எல் லாம் போகட்டும்; அவனோ என மனதை முழுவதுங் கவ ர்ந்துகொண்டான்; அவன் என்னை வேண்டாமென்று சொ ல்லிவிடுவானோ? என்ன செய்வேன்? அதை நினைக்கும் பொழுதே என அங்கம் பதறுகிறதே! என்ன செய்யலாம்? அவனை எப்படிச் சந்திப்பது? யாரிடம் என் மனதை வெ ளியிட்டுக்கொள்ளலாம்? என தந்தைக்கு ஒன்றுந் தெரிய வக்கூடாதே! என்ன செய்வேன்! தெய்வமே! தெய்வமே! என்னை எவரும் விரும்பக்கூடாத நிலையில் வைத்திருக்கின் றனையே! என்னை யெப்படியாவது இன்பம துய்க்கும்படி செய்வாயோ? அவன் மனம் எனக்குக் கிடையாவிடில், என் இருதயம் வெடித்து விடும்போலிருக்கிறதே!" என்று [illegible] [illegible]வும், மனக்கலக்கத்தி லாழ்ந்து, முகம்வாடி, வியர்வை யால அங்கியிட்ட உடம்புடையவளாய், தனதாடை, கேசம் ஆபரணங்கள் முதலியன போனவழிதெரியாது, ஒரிடத்தி லுட்காராமலும், ஓரிடத்தில் நிற்காமலும், எதிரிலிருப்பவை பக்கத்திலிருப்பனவற்றைக்கூட அறியாமலுமிருக்கும் நிலை யில், மிகவும் சோர்ந்தவளாய் ஒரு சாய்நாற்காலியிற் சாய்ந் துகொண்டு தனதுடம்பைத் துடைத்துக்கொண்டு சோர்ந் [illegible]டாளாகதான், சற்றுநேரம் அவள் உட்கார்ந்திருந்தாள். [illegible] எழுந்து, வேலைக்காரியைக் கூப்பிட்டாள்.

"அம்மா!" என்றோடி வந்தாள்.

"பெயரை விசாரித்தாயா?"

"விசாரித்தேன்."

"சிவாஜியா?"

"ஆமாம்."

"சரி; போ."

உடனே சற்றுநேரம் பின்வருமாறு யோசித்தாள்.

"இப்பொழுது நான் என்ன செய்யலாம்? நான் யாரை நம்புவது? எனது வேலைக்காரியை நம்பலாம். அவள் என் அன்பரொடு பொய்ப்பேசவல்லவளன்று; எனக்கு வேண்டியவர்கள் அவளிடத்தில் நான் ஆசைவைக்க மனங்கொள்ளார்கள்; ஆதலின் என் அன்பனுக்கே நேராயெழுதிவிடலாமா? மத்தியில் ஒருவர் ஏன் வேண்டும்? நானே கடிதமெழுதுகிறேனே! அவர் என்னவாவது நினைத்துக் கொள்ளுவாரோ! அவர் நினைத்துக்கொள்ளுவதற்கு இடமென்ன! என்னை முழுவதுமே அவரிடம் ஒப்புவித்துவிடுகின்றேனே! அவர் என்னிடம் தயைகூர்வதற்கு தடையுமுண்டோ! என்னவோ? நான் என்ன சொல்ல முடியும்? என் அன்பர் மனத்தை யார் கவர்ந்துகொண்டிருக்கிறார்களோ? அப்படி யாரேனுமொருத்தி யிருப்பாளே யாகில் அவளைத் தரிசனஞ் செய்தாவது கடைத்தேறலாமோ? அதுகிடக்கட்டும். இப்பொழுது என் அன்பருக்கு ஒரு கடிதம் வரைவேன்."

என் கண்ணே!

உன்னை நான் இன்று காலை பார்த்தேன். அவ்விநாடியே என்னை உன்னிடம் ஒப்புவித்துவிட்டேன். அங்[illegible]வேண்

டும். நான் உன் விரோதியின் புதல்வியென்று சங்கிக்கவேண்டாம்.

ரோஸினாரா

உடனே வேலைக்காரியைக் கூப்பிட்டு, கடிதத்தைக் கொண்டுபோய், சிவாஜியிருப்பிடமறிந்து யாருமறியாதபடி கொடுத்து, பதில் வாங்கிக்கொண்டு வரச்சொல்லி யனுப்பினாள்.

---

## அத்தியாயம் 4.

### மந்திராலோசனை.

---

நமது தேசத்தை ஆறுநூறு வருஷங்களுக்காண்டு வந்த துருக்கர்களின் முக்கியமான வம்சத்தாராகிய மொகலாயவரசர்களுள் அக்பர் சக்கிரவர்த்திக்கீடானவர் ஒருவருமில்லை ஒருநாட்டின்மேற் படையெடுத்து அதைத்தன்னரசாட்சிக்குள்ளடக்கிக்கொண்டபோதும், அந்நாட்டில் தொழப்பட்டுவரும் தெய்வத்தை மரியாதை செய்வான் ஜனங்களை வருத்தமாட்டான், அந்நாட்டின் சட்டங்களையே அனுசரித்து அந்நாட்டையாள்வான். மிகவும் சாந்தகுணத்தையுமுடையவன் ஆனால், நிரம்பப்பராக்கிரமசாலி எல்லோரும் கடவுளின் புத்திரர்கள்; ஒருமதத்தினின்றும் மற்றொரு மதத்துக்குத் தாவவேண்டுவதில்லை யென்றுகொள்[illegible]யுடையவன்.

அவனுடைய போர்[illegible]தல் வருணை [illegible] காலத்தில். அநேக ராஜ்ஜியங்கள் [illegible] கொண்டுவரப்பட்டது. ஆனால், [illegible] [illegible]வன் உடையவனுகவில்லை, அன்றைக்கு ஆசையுடையவன்

தன்காரியத்தைச் சாதித்துக்கொள்வதற்கு எதுவேண்டுமானாலுஞ் செய்வான், மதவபிலாஷையாலும், மனவழுத்தத்தாலும் எதுவேண்டுமானாலுஞ் செய்வான்; ஆளுக்குத் தகுந்தபடி வேஷம்போடுவான், எதிலும் அவனுக்குச சந்தேகம்தான் தன்னைக்கூடதான் நம்புவதில்லை, ஆனால் அபார சக்தியையுடையவன்; ஒவ்வொரு இராஜ்ஜியக் காரியத்தையும் தான் நேராகவேயிருந்து செய்வான். தன் குழந்தைகளிடம் மாத்திரம் பிரபப அன்புகொண்டிருந்தான்.

இப்பெயர்ப்பட்ட அரசன் தான் ஒருவரையும் நம்பாது தன்காரியங்களிலெல்லாம் அதியாகபபோய், பின்பு மொகலாய ராஜ்ஜியம் சின்னாபின்னமாய்ப் போவதற்குக் காரணபூதனாயிருந்தான்,

இன்றைத்தினம், சில விராஜ்ஜிய விஷயங்களைப்பற்றி யோசிப்பதற்கு ஒரு சபைகூட்டினான். அநேக விஷயங்களைப்பற்றி அர்சபை பேசிற்று. ஆனால், யாவரும் அரசன் நோக்கம் அறிந்தே பேசவேண்டும். அரசனுக்கு விரோதமாய்ப் பேசும்படியாய் நேரிட்டாலோ அவனுடைய உயிரும் பொருளும் அவனதல்லவென்று நிச்சயம் பண்ணிக் கொள்ளலாம். எல்லோரும் போய்விட்டார்கள். ஜெயசிங்கு மாத்திரம் தங்கினான்.

"ஜெயசிங்கு! ஊரில் என்னசொல்லிக்கொள்ளுகிறார்கள்?"

"[illegible]ப்பற்றி?"

"[illegible] செயல்களைப்பற்றி"

"[illegible] ஒன்றுமில்லையே"

"[illegible] கவனிக்கவேயில்லையா?"

"கவனித்தேன்."

"கவனித்தால் தெரியவேண்டுமே."

"தெரியும்"

"என்ன?"

"ஒருவரும் ஒன்றுஞ்சொல்லவில்லையென்று."

"சத்தியமாய்."

"ஆமாம்."

"சிவாஜி என்ன செய்கிறான்?"

"சும்மாவிருக்கிறான்."

"அவன்கூடவா?"

"அவன் என்ன செய்ய முடியும்?"

"ஏதேனும் விஷமம் செய்வானே!"

"மஹாராஜ்! அவனை என்னசெய்யப்போகிறீர்கள்?"

"நீசொல்."

"தங்கள் சித்தம்."

"விட்டுவிடலாமா?"

"என்னவோ?"

"உனக்கு என்ன தோற்றுகிறது?"

"அவனைக்கொண்டு நமது காரியங்களைச் சாதித்துக் கொள்ளலாமென்றும், அவனை நமது சேனையில் வைத்துக் கொள்ள வேண்டுமென்றும் தோற்றுகிறது."

"அவனையும் நம்பலாமா?"

"நம்மோடு எப்படி எதிர்த்து நிற்பது?"

"அவன் பலத்தை நீ நன்றாயறியவில்லையா?"

"மஹாராஜ்! எனக்குத் தெரிந்தவரையில் [illegible]"

"சரிதான்—"

"அவனும் ஒடுங்கிவிட்டான்."

"அவனை நான் விடமாட்டேன்."

"வைத்துக்கொண்டு என்னசெய்வது?

"வைத்துக்கொள்வானேன்?"

"பின்னை?"

"இதுகூடக் கேட்கவேண்டுமா?"

ஜெயசிங்குமனம் பதறிற்று. அவன் நினைத்தபடியே சரியாயிற்றே யென்று திகைத்துநின்றான்.

"என்னவிழிக்கிறாய்?" என்றான் திரும்பவும் அவுரங்கசீப்.

"ஒன்றுமில்லை. மஹராஜ்!"

"ஏதோவிருக்கின்றது."

"பொய் சொல்லாதே"

"அப்பதரைத் தாங்களும் ஒருநிகராக வைக்கலாமா?"

"அதனாற்றான்—"

"அடித்துத் துரத்தலாமே."

"என்ன செய்தாற்றான் என்ன?"

அவுரங்கசீபுடன் அதிகமாய் ஒன்றும் சொல்லமுடியவில்லை. பாம்பாட்டி, புதிதாய்ப் பிடித்த பாம்புடன் எவ்வளவு ஜாக்கிரதையா யிருக்கவேண்டுமோ, அதைவிடப்பதின் மடங்கு ஜாக்கிரதையுடனே அவுரங்கசீபோடு நடந்துகொள்ளவேண்டும்.

"இல்லை; எனது சிறியவறிவிற்கு,சிவாஜியை ஒருபொருட்டாகவே நினைக்கவேண்டாமென்று தோற்றிற்று."

"ஜெயசிங்கு! உனக்கு உலகப்பழக்கம் கிடையாது."

"மஹாராஜ்! தங்கள் சித்தம்."

"சிவாஜி பிழைத்திருப்பானேயாகில், நமக்குத் தீங்கையே செய்வான்."

"இனிமேல்தான் சொல்லுவதிற் பயனென்றுமில்லை" யென்பதையறிந்து, சரியான சித்தத்துடனில்லாத ஜெயசிங்,

"அப்படியா?" என்றான்.

"ஆனால் தந்திரமாய் எப்படி நமது காரியத்தை முடிப்பதென்று யோசித்துக்கொண்டிருக்கிறேன்."

ஜெயசிங் சும்மாவிருந்தான்.

"ஜெயசிங்! உன் மனதிற்கு ஏதேனும் தட்டிற்றா?"

இப்பொழுது ஜெயசிங் முகம் மலர்ந்தது.

"மஹாராஜ்! எனக்கு ஒரு யுக்தி தோற்றியிருக்கிறது."

"என்ன?"

"சிவாஜியை, இப்பொழுது போலல்லாமல், காவலில்லாமல் ஊரினுள்ளே எங்கே வேண்டுமானாலும் போகலாமென்று உத்திரவு கொடுங்கள்."

"பைத்தியக்காரத்தனமாய்ப் பேசுகிறாயே."

"இல்லை. மஹாராஜ்!"

"பின்னை."

"காவலேயில்லாமல் விட்டுவிடவேண்டுமென்று நான் சொல்லவில்லை. தற்காலத்தில் சிவாஜி ஒரு பிசகுஞ் செய்யமாட்டான். ஏனெனில் காவற்காரர்கள் கூடவிருக்கிறார்களென்பது இவனுக்குத் தெரியும். நான் சொல்லுவதென்னவென்றால்:—அவன் காவலேயில்லையென்று நினைக்கும்பொழுது, அவனறியாமலே, மூன்று நான்கு [illegible]ரர்கள் எப்பொழுதும் அவனுடன்கூடவே யிருக்கவேண்டும். மேலும், சிவாஜி ஊரினுள்ளே யாரோடும் [illegible]லாமென்றபொழுது அவன் யாரோடாவது [illegible] பிற

ற்றமாட்டான்? அப்பொழுது காவற்காரர்கள் விழித்திருந்து அவனைப் பிடித்திழுத்து வரமாட்டார்கள்? அல்லாமலும்——"

"சற்றிரு; சற்றிரு;——"

"அல்லாமலும், எப்பொழுதாவது அவன் தப்பியோடுவதற்குப் பிரயத்தனஞ் செய்யமாட்டான்?"

"ஜெயசிங்! நீதான் நிரம்பப் புத்திசாலி."

"மஹாராஜ்! நான் சொல்லுவது சரியென்று உங்களுக்குத் தோறறவில்லையா?"

"நீ சொல்லுவதுதான் வழி."

"அப்பொழுது ஏதோ விசாரணை செய்கிறதுபோற் செய்து நமது காரியத்தை நடத்திக்கொள்ளலாமே."

அவுரங்கசீப் யாரையும் நம்பாதவனானகையால், பின்னுஞ் சற்றுநேரம் யோசனை செய்தான். அப்புறம்,

"அப்படியே செய்துவிட்டோம்."

"மஹாராஜ்! தங்கள் காரியம் சித்தியாயிற்று."

"ஜெயசிங்! உன்னைப்போன்றவர்கள் என்பக்கத்திலிருக்கும்பொழுது, எனது காரியம் சித்தியாவதற்குத் தடையென்ன?"

"மஹாராஜ்! நான் போய்வருகிறேன்" என்றுசொல்லி அவுரங்கசீபுடன் மிகவணக்கத்துடன் விடைபெற்றுக்கொண்டு ஜெயசிங் தன் காரியம் சித்தியாயிற்றென்று மனக்களிப்புடன் தன் அரண்மனை போய்ச்சேர்ந்தான்.

## அத்தியாயம் 5

[illegible] முழுவதையுமே தங்களிடம் ஒப்புவித்துவிட்டேன். அங்கீகரிக்கவேண்டும். தங்கள் [illegible] புதல்வி

யென்று சற்றேனும் சங்கிக்கவேண்டாம்." என்று வரைந்திருந்த கடிதத்தை சிவாஜி கையிலேயே வைத்துக்கொண்டு அடிக்கடி வாசித்தான். "இது என்ன வேடிக்கை! உயிர்பிழைத்து ஊர் போய்ச்சேர்ந்தாற்போரும்போலும்போலிருக்கிற எனக்கு, விவாகமும் வேண்டுமோ? அவன் என்னை எப்படி யறிந்தான்? சிறையிலிருக்கின்றேனென்பது அவளுக்குத் தெரியாதோ? ஆனால் "தங்கள் விரோதியின் புதல்வியென்று சற்றேனுஞ் சங்கிக்கவேண்டாமென்று எழுதியிருக்கிறாளே. அதுவும் தெரிந்து, நான் சற்றேறக்குறைய நாற்பதுவயதானவனென்பதையுமறிந்து, எனக்கு வேறு மனையாளிருக்கலாமென்பதையுமறிந்து எழுதிய கடிதமல்லவா இது? ஆதலின் ஒருவேளை அவ்வாங்கசீபது மோசமாயிருக்கலாமா? அவனே, வேதனுமொரு சூழ்ச்சிக்கச் செய்த காரியமாயிருக்கலாம். பின்னை, நம்மைக்கண்டு நிஜமாகவே இராஜகுமாரி ஆசைகொள்வதற்குக் காரணமொன்றுமேயில்லையே. கிடக்கட்டும்; கடிதம் கொண்டுவந்த வேலைக்காரியைக் கூப்பிட்டு விசாரிப்போம்;" என்று வேலைக்காரியைக் கூப்பிட்டான்.

"மஹாராஜ்!" என்று ஓடிவந்தாள்

"நீ எங்கேயிருந்து வருகிறாய்?"

"அரண்மனையிலிருந்து."

"யார் அனுப்பினார்கள்?"

"அம்மாள்"

"யார்?"

"சக்கிரவர்த்தி புதல்வி."

"யாரிடம் இதைக் கொடுக்கச் சொன்னாள்?"

"தங்களிடம்."

"என்பெயர் என்னவென்று சொன்னார்கள்?"

"சிவாஜி மஹாராஜ என்று"

"பெயர்கூட தெரிந்திருக்கிறதே. நமது பெயரைப் பெண்பிள்ளை—அதிலும் கோஷாவிலிருக்கும் பெண்பிள்ளை—எப்படி அறிவாள்?" என்று தனக்குத்தானே நினைத்துக்கொண்டு, "பெயரையெப்படி தெரிந்துகொண்டீர்கள்?" என்றான்.

"ஜெயசிங்கு வீட்டுவாசற் காவலாளனை விசாரித்துத் தெரிந்துகொண்டோம்."

"எப்பொழுது?"

"இன்றுதான்."

"இன்றுதானே நான் அங்கே போயிருந்தேன்."

நீங்கள் அங்கே யிருக்கும்பொழுதான் அம்மாள் உங்களைப் பார்த்தார்கள்.

"அப்புறம்?"

"யார் அது? விசாரித்துவா; வென்றென்னை யனுப்பினார்கள்."

"அப்புறம்?"

"நான் வெளியேவந்து தங்கள் பெயர் முதலியனவற்றை விசாரித்து வந்து சேர்ந்தேன்."

"நான் சிறையி லிருக்கிறே னென்பதைத் தெரிந்துகொண்டாயா?"

"அம்மாளுக்கும் தெரிவித்தேன்."

"அவள் ஒன்றுஞ் சொல்லவில்லை?"

"இல்லை."

"பின்னை?"

"இக்கடிதத்தை யெழுதி, தங்களிருப்பிட மறிந்து இதைக்கொண்டுபோய்க் கொடுத்து பதில் வாங்கிக்கொண்டு வரச்சொல்லி என்னையனுப்பினார்கள்."

சிவாஜிக்குப்போகும் வழியொன்றும் புலப்படவில்லை. "இப்பொழுது என் இன்னொருவிவாகம்; இவள் நிஜமாகவே என்மேல் ஆசைகொண்டவளாக விருக்கட்டும்; எனக்கு மனைவிகள் இல்லையா? மேலும், இச்செய்தியை அவுரங்கசீபறிந்தால் என்னைக் கண்டிப்பாய்க் கொன்றுவிடுவானே. இப்பொழுது பிழைத்த வந்து இருந்துகொண் டிருக்கிறேன். ஒருவேளை என்றைக்காவது தப்பியோடி ஊர்போய்ச் சேரலாமென்ற வெண்ணம் என்மனத்தே குடிகொண்டிருக்கிறது. இப்பொழுது உயிருக்கேயன்றோ ஹானிவரும்போலிருக்கிறது ஆனாலும், நன்றாகயோசிப்பேன்.

---

## அத்தியாயம்-5

### மந்திராலோசனை.

எவ்விதத்தாலும், சிவாஜியைக் கொலைபுரியாதவரையில், அவுரங்கசீப் சும்மாவிரானென்பது ஜெயசிங்குக்கு நன்றாகத்தெரியும். ஆதலின், மனவருத்தம் மிகுந்தது. சிவாஜியின் தாழ்மைக்குக் காரணம் ஜெயசிங்குதான். அவ்விஷயத்தையும் நேராகவே சிவாஜிசொல்லிவிட்டான். இனி, எப்படிச் சிவாஜியைத் தப்பவைக்கலாமென்ற வெண்ணத்தில் ஜெயசிங்கு முழுவது ஆழ்ந்திருந்தான். எத்தனையோ காவற்காரர்களை வைத்து சிவாஜியைக் காத்துக்கொண்டிருக்கிறார்களென்பதை யறிந்து, பின்னும் மனக்கலக்கத்திலாழ்ந்து சில நாட்களாக அயன்மனைக்குக்கூட ஜெயசிங்குபோவ

வேயில்லை. சக்கரவர்த்திக்கு தனக்கு உடம்பு அசௌகரியமா யிருக்கிறதென்று சொல்லி யனுப்பிவித்துவிட்டு, பகற் கனாக்கண்டுகொண்டிருந்தான்.

சிவாஜியைப்பார்த்தயாவரும் அவனாற் கவரப்படுவார்களென்பதற்குச் சந்தேகமேயில்லை. மெலிந்த உடம்பும், மீசை தாடி வளர்ந்த முகமும், கூரியமூக்கும், பரந்த நெற்றியும், இரண்டு ஜோதியெனத்தோற்றும் இருவிழிகளும் அழகுக்கு அறிகுறியானவையல்ல. ஆனால், இவையெல்லாம் ஒருங்குசேர்ந்திருந்த சிவாஜியின் வதனம், எவர்மனத்தையும் கவர்ந்தது. தனது விரோதியின் புத்திரியாகிய ரௌஷனாரா மனத்தைக் கவர்ந்தது. தூரத்தித்தூரத்தியடித்துகடைசியாக அவுரங்கசீபுக்குஅடிமையாக்கிய ரஜபுத்திர வீரனாகிய ஜெயசிங்கு மனம் நொந்துபோகும்படி செய்தது. அவுரங்கசீபும், தன்னையெதிர்த்த ஒருவனாகிய சிவாஜியைக்கண்டவுடன், "ஆகா! இவனன்றோ வீரன்!" என்றான். இவ்வளவு பராக்கிரமசாலியும், யாவர்மனத்தையும் கவரவல்லவனுமான சிவாஜியை எதிரியாகக்கொள்ளும் பாக்கியத்தைப் பூண்ட எவன்தான் சும்மாயிருக்க முடியும்? சாதாரணமாய் எல்லோரும் இப்பெயர்ப்பட்ட வீரனுடன் சிநேகமாயிருந்து வருவது வழக்கம். அவுரங்கசீபோ, நிரம்பக்கொடியன் அதிகாரம் குறைவதாயிருந்தால், எச்செயலும் செய்யத் துணிவான். முன்னமே, தான் பட்டத்துக்குவருவதன்பொருட்டு, தனது தகப்பனைச் சிறையிலடைத்து வைத்திருந்தான். தனது சகோதரர்களைப் பலவிதமாய்மோசஞ்செய்து வலைக்குள்ளகப்படும்படிசெய்து, கொன்றுவிட்டான். அப்படிப் பட்டவனா, சிவாஜியை உபரோதி வைத்திருக்கச் சம்மதிப்

பான்? இவ்விதயோசனைகளெல்லாம் ஜெயசிங்குக்குமுன்னம் இருக்கவேயில்லை. தான் அவுரங்கசீப் சேனாதிபதியாகை யால், தனது எஜமானனுக்கு எவ்வளவு நன்மைசெய்யலா மோ அவ்வளவும் செய்யவேண்டுமென்று நினைத்தவன் அவன். சிவாஜி நேரேவந்து பேசியபோது வேறு வேறு விஷயங்களைப்பற்றி நன்றாக எடுத்துச் சொல்லவே, தனது முன்னோர் எல்லோரும் தன்னைவந்து மண்ணைவாரி இறைப் பதுபோல பகற்கனாகண்டுகொண்டிருந்தான். "நாம் தான் கெட்டுப்போய்விட்டோம்; பிறராவது துருக்கன்கீழகப்படா மலிருக்கும்படி விடலாகாதா? நமது முன்னோர், தமது சம்மந்தியரெல்லாம் துருக்கன்கீழகப்பட வேண்டுமென்று நினைத்தார்கள்?" இவ்விரண்டு வாக்கியங்களையும், அவன் மறக்கவேயில்லை. எவ்விதம்போனாலும் வழியொன்று ஏற் படவில்லை. நிற்றறிந்ததும், அறியாததுமாக எத்தனையோ காவலாளிகளை ஊரெங்குமேற்பட்டிருந்தார்கள். தெருவே நடக்கும்பொழுது ஒன்றையும்பற்றியே பேசக்கூடாது. மிக இரகசியமாய் ஒருகாரியத்தை நடத்தியிருக்கிறோ மென்றபொழுதுகூட, அச்செய்தி அரசனை யெட்டியிருக்கும். அவுரங்கசீப் காலத்தில் சுவருக்குக்கூட காதிருந்தது. இப் பெயர்ப்பட்டவன் சிவாஜி ஊரிலிருக்கும்பொழுது முன்னி லும் பதின்மடங்கு ஜாக்கிரதையாயிருக்கமாட்டானா? சிவா ஜியைத்தவிர அவனை யெதிர்ப்பவர் பூமிக்கல் தானத்தில் வேறெவருமேயில்லை ஆதலின், சிவாஜி நடை உடை முத லியவற்றை ஒன்றுவிடாமல் அரண்மனைக்குத் தெரிவிக்க எத்தனையோபெயர் நியமிக்கப்பட்டிருந்தார்கள். அவர்களைப் பற்றி நினைக்கும்பொழுதே ஜெயசிங்கு நடுங்கினான். ஆனால், எப்படி சிவாஜியைத் தப்புவிப்பது? அவனுக்குவாக்கன்றோ

கெடுத்துவிட்டேன். அல்லாவிடினும், அவனை நானெப்படி யாவது தப்புவிக்கவேண்டும், எப்படி நினைத்தாலும் ஒருவழி யும் ஏற்படவில்லையே! அநியாயமாய் ஒரு பெரும்பழிக்கன் ளே ஆளாகிவிட்டேன், ஒ நமிகசசூரனகொலைக்கு காரணம் நானாகிவிடுவேனே! தெய்வமே! எனக்கு புத்தியில்லாமற் போய்விட்டதே? க்ஷத்திரியகுலத்திற் பிறந்து, நான் மலை ச்சனுக்கு அடிமையானது போதாதெனக்கருதி, அச்சூரனை யும் அடிமையாக்கக் கருதினேன். அதுவும்போதாமல், பழிக்கும் ஆளானேன்" என நினைத்து நினைத்துக் கதறி அங்கம் மெலிந்தது.

இஃதிப்படியிருக்க, சிவாஜி யென்னசெய்தானென்ப தைப் பார்ப்போம். எல்லாவற்றையும் பவானியிடம் ஒப்பு வித்துவிட்டு, ராம ஸ்மரணை பண்ணிக்கொண்டே அநேக மாய் நாள்முழுவதையும் போக்குவான். இப்பொழுதுதான் ரௌஷனாராவின் வேலைக்காரி உள்ளே நுழைந்தாள்; சற்று வெளிச்சமும் சற்று இருட்டுமாக விருக்கிறது தெரு விளக்கு கூட்டமில்லை. உள்ளே நுழைந்தவுடன், "ஐயா அவர்களுக்கு சற்றுபொழுது சாவகாசமிருக்குமோ?" வென் றாள்.

"ஏன்?"

"கேட்டுவரச் சொன்னார்கள்."

"நீ யார்?"

"அம்மாள் ———— "

"அறி————"

அவளைக்காணோம்.

சற்றுப்பொழுது நிச்சப்தமாயிருந்தது.

ஓர் சப்தம் கேட்டது. வாசற் காவற்காரன் கை மூடிற்று. அவன் முகம் மலர்ந்தது. கதவு தாழ்கோலிடப்பட்டது. ரௌஷினாரா உள்ளே வந்தாள்.

தான்போட்டிருந்த வேலைக்காரியின் உடையை யெடுத்து வீசிப்போட்டாள்.

சிவாஜியின சமீபத்தில வந்து,

"கண்ணே! இன்றுதான் என் ஜென்மம் சபலமாயிற்று." என்றாள

"ரௌஷினாரா!" என்றான், தூக்கத்தினின்றும் விழித்ததுபோல சிவாஜி.

"நாதா!—

"அம்மா! என்னையேன்—

"உண்மையா?"

"ஆமாம். நான்யார தெரியுமா?"

"தெரியும."

"தெரிந்தால், என்மேல் ஆசைவைப்பதற்கில்லையே."

"எனக்கன்றோ தெரியும் அது?! என்றாள் படபடப்புடன்.

"அதுவென்ன?"

"வேறொன்றுமில்லை."

"எனகொன்றுமே தெரியவில்லை."

"நீங்கள்தாம்"

"என்றால்"

"உங்களைப்பார்த்து ஆசைவையாதவர்கள் அலிகளாக விருக்கவேண்டும"

"ரௌஷினாரா!!!"

"தவறில்லை."

"இல்லை. நான் உன் தகப்பன் அடிமையன்றோ?"

"ஆயினென்?"

"அடிமையை வரித்தலுமுண்டோ?"

"மன்மதனுக்கு அடிமையல்லாதவர் யார்?"

"நாம் நிஜலோகத்திலிருப்பதாகப் பேசுவோம். நானோ அடிமை; நீ இங்குவந்திருப்பது உன் தகப்பனுக்கெட்டினாலே, நமதுயிர்போய்விடும். நானோ துன்பத்துக்காகப் பிறந்தேன். நீ இளம்பிராயத்தவள். நீ வீணாக துயருற வேண்டாம். உடனே புறப்படு—"

"ஐயா! என்மேல் கொஞ்சமேனும் தயையில்லை?" என்று முகவாய்க் கட்டையைப் பிடித்தாள்.

"பெண்ணே! உனது சௌந்தரியத்தையும், செல்வத்தையும், நற்குணத்தையும் இப்பாவியுடன் கூடி வீணாக்க வேண்டாம்."

"யார் பாவி?"

"நான்."

"உங்களைக் கூடும் பாக்கியம் கிடையாத யானன்றோ பாவி. என் கண்ணே! உன்காலில் விழுந்தேன்" எனக் காலில் விழுந்து, "உன்னைவிட எனக்கு வேறு தெய்வமில்லை. செப்பினேன்; இது சத்தியம்" என்றாள்.

"ரௌஸினா! நீபித்தம் பிடித்தாற்போல பேசுகிறாயே? நானும் நீயும் என்று கூடியிருக்கலாம்? எவ்விடத்தில் கூடியிருக்க முடியும்?"

"தமது இராஜதானியில்."

"எந்த ஜென்மத்தில்?"

"இச்சன்மத்திலேயே."

"உனது தகப்பன் என்னை விடமாட்டான்."

"நாம் தப்பியோடி விடுவோம்."

"முடியாது."

"இல்லை; முடியும்."

"நீ சிறுமி."

"ஆயினும் நான் நினைத்த காரியத்தைச் சாதிப்பேன்."

"இருக்கட்டும். என்னிடம் ஏன் ஆசைபூண்டாய்?"

"ஏனோ தெரியாது."

"நமது மதமே வேறு."

"இல்லை"

"பின்னை?"

"நமது மதம் ஒன்றே. தாங்கள் தாம் எனக்குத் தெய்வம். தாங்கள் தாம் எனது நெறி. தாங்கள் தாம் எனக்கு எல்லாம். ஆதலின் தங்கள் நெறிதான் எனது நெறி. தங்கள் மதம்தான் எனது மதம்."

"இது ஏதடா இது?" என்று தனக்குத்தானே சிவாஜி சொல்லிக்கொண்டான். பிறகு "எனக்குமுன்னே விவாகமாயிருந்தால்?" என்றான்.

"எனக்கு ஏன் அது?"

"ஏனென்றால்?"

"அவர்களுக்காவது பணிவிடைசெய்து திருப்தியடைவேன்."

"இதுபொய்யா? மெய்யா?" என்றான் தனக்குள்.

"ஆனால், ஒரு செய்தி சொல்ல மறந்துவிட்டேன். நான் உன்னை விவாகம் செய்துகொள்ள முடியாது." என்றான்.

"ஏன்?"

"மதவேறுபா டிருக்கின்றதே."

"அதுதான் இல்லையென்றேனே."

"உன் மதத்தின்படி சரிதான்!!"

"அதுதான் சரியான மதம். அல்லவா?" என்று சிவாஜியை முத்தமிட்டு ஆனந்தித்தாள்.

"ரௌஷினாரா! ஒரு காரியம் செய்வதற்குமுன் நீ நன்றாக ஆலோசித்துச் செய்யவேண்டும்."

"நான் ஆலோசித்தாய்விட்டது."

"விவாகம் முடியாது."

"விவாகமென்று லென்ன?"

"சடங்குகள்—"

"எனக்குவேண்டாம். உங்கள் மனத்தின் ஒரு மூலையில் என்னையும் போட்டுவைத்திருந்தாலே போதுமானது."

"இது என்ன விடாமுண்டன் கொடாமுண்டன் செய்தியா யிருக்கின்றதே" என்று நினைத்து, பிறகு

"சரி! நான் சம்மதித்ததாகவே வைத்துக்கொள்—"

"கண்ணே!" எனக் கூச்சலிட்டாள் மிக்கானந்தத்துடனே.

"ரௌஷினாரா! நான் சொல்வதைக்கேள்."

"என்ன! நாதா!"

"நாம் மேலே செய்யவேண்டியதென்ன?"

"கேட்கவேண்டுமோ?"

"ஏன்?"

"இவ்வூரைவிட்டுப் போகவேண்டியதுதான்."

"எப்படி?"

"சொல்லுவேன்."

"சொல்லு."

"தீர்க்கமாய் ஆலோசித்து நாளையே சொல்லுவேன்."

"என்ன?"

"இன்றைக்கு எட்டாவது நாள் நாம் இவ்வூரைவிட்டு விலகவேண்டும். நாதா! கவலைவேண்டாம்."

"ரௌஸிஞரா! என்னவாய் முடியும்?"

உடனே தன திருகைகளையும் சிவாஜியின் கையிற்கோர்த்துக்கொண்டு "கண்ணே! முடியுமென்பதத்குத் தடையில்லை" யென்றாள்.

"நீ போய்வா. யாரேனும் நீ இங்குவந்ததை யறிந்து அரசனிடம் தெரிவிக்கப்போகிறார்கள்."

"எனது வேலைக்காரி உடையைப் போட்டுக்கொண்டன்றோ வந்தேன். ஆதலின் ஒருவருக்கும் இவ்விஷயம் தெரியாது. நான் போய்வரலாமா?"

"அப்படியே."

"அன்பே!" என்று சொல்லிக்கொண்டே, தான் எதிர்ந்திருந்த உடையை யெடுத்துத் தன்மேலணிந்துகொண்டு, சற்று தூரம் நடந்துசென்றாள். உடனே திரும்பிவந்து,

"மறந்துவிட்டேன்" எனச்சொல்லிக்கொண்டே, சிவாஜியை முத்தமிட்டாள். திரும்பவும் போய்வருகிறேனென்று சொல்லிக்கொண்டே போய்விட்டாள்.

இன்று தான் மேகம் கலைந்து. இனி, சிவாஜிக்கு எப்படியாவது தப்பியோடிப்போய்விடலாமென்ற தைரியமுண்டாயிற்று. "கடவுளை நம்பியது வீண்போகுமா? தனது விரோதியின் சகோதரனுக்கும் அபயங்கொடுத்த இராம

பிரான் கஷ்டதிசையில் உதவிபுரியாமலிருப்பாரா? சரி; ரௌஷிநாரா சொல்லுவதெல்லாம் சத்தியம்தான். அதில் அணுக்கூட தவறில்லை. அவளென்னிடம் பூர்ணமாய் அன்புவைத்திருக்கிறாளென்பதற்கு ஆக்ஷேபணையில்லை. ஆனால், எப்படித் தப்பியோடுவது? அவள் என்னவோ சொல்லுகிறேனென்று சொல்லியிருக்கிறாளே! ஆயினும், நாங்களிருவர் மாத்திரம் ஒருகாரியத்தைச் சாதிப்பதென்பது ஒருகாலும் முடியாது; ஆதலின், பின்னொருவனுதவி எனக்கு அவசியம் வேண்டும். நான் யாரிடம்போய்ச் சொல்லுவது? இவ்வூரிலென்னவோ, ஒருவரையுமே நம்பக்கூடவில்லை. எனக்கும் அனேகமாய் ஒருவருமே தெரியாது. ஆனால், யாரிடமாவது சொல்லாமல் மாத்திரம் காரியம் நடவாதென்பது நிச்சயம். நான் யாரிடம் இச்செய்தியை வெளியிடலாம்?... ...ஜெயசிங்கு......நம்பாமல் எக்காரியம் முடியும்? அதனால் எக்கேடுவரினும் வரட்டும். மனக்கவலையை நீக்கிக்கொள்ளுவேன்" என நிச்சயம் செய்துகொண்டு, ஜெயசிங்கனிடை புறப்பட்டுவிட்டான்.

சற்று நேரத்திற்கெல்லாம், ஜெயசிங்கும் சிவாஜியும் பேசிக்கொண்டிருக்கக் காணப்பட்டார்கள்.

"மஹாராஜ்! வந்தனம்." என்றான் சிவாஜி.

"பிரதிவந்தனம் தந்தேன்."

"பார்த்து வெகு நாட்களாயின."

"ஆமாம். ஐயா! எனது மனம் புண்ணாகிவிட்டது."

"ஏன்?"

"நான் செய்த செயலைக்குறித்து."

"என்ன?"

"உங்களை வருத்தியது."

"அது கிடக்கட்டும்."

"ஐயா! உங்களை அவன் விடுவதாகவில்லை."

"பின்னை."

"அ—வ—ன்"

"அறிந்தேன்."

"என்மனம் பதைக்கின்றது."

"ஐயா!"

"இப்பொழுது என்னசெய்யலாமென்று எனக்குத் தெரியவில்லை."

"எனக்கும் தெரியவில்லை."

"எப்படியாவது சீக்கிரம் தப்பியோடவேண்டும்."

"எவ்வாறு முடியும்?"

"அதேதான் எனக்கும் கவலை."

"என்னவோ, தாங்கள் விடுவதுதான் வழி."

"எங்கேயும் காவல் வைத்திருக்கிறான். எவ்வழியாலும் நீங்கள் ஊரைவிட்டு வெளியே போவது முடியாதபடி பாதுகாத்துக்கொண்டிருக்கிறான். ஆதலின் வஞ்சகமாகச் செய்யவேண்டும்."

இவ்வளவுதூரம் சொல்லியான பிறகுதான், சிவாஜிக்கு ஜெயசிங்கிடம் நம்பிக்கையுண்டாயிற்று. ஆதலின், தன்னிடம் ரௌஷிஞரா வந்தது, அவள் சொல்லியன முதலிய எல்லாவற்றையும்பற்றி விரிவாய் ஜெயசிங்கிடம்சொன்னான்.

இதைக்கேட்டவுடன் ஜெயசிங்கு முகம் மலர்ந்தது. சிறையி லடைப்பட்டிருந்தவன் விடுபட்டதும் பரம சந்

தோஷத்தின் பதின்மடங்கு சந்தோஷமடைந்தான். இனி, சிவாஜியைத் தப்பியோடச் செய்வது இலகுவெனத் தோற்றிற்று. ஜெயசிங்கு உள்ளையென்பதையறிந்தால், அவனைச் சிரச்சேதம் பண்ணிவிடுவான். ஆனால், ரௌஷினாரா சம்பந்தப்பட்டதா யிருந்தாலோ, எவ்வளவு கொடியனா யிருந்தாலும் ஒன்றுஞ் செய்யமாட்டானெனத் தோற்றிற்று. ஏனெனில், தனது புத்திரர்களைக் காட்டிலும், ரௌஷினாரா மேல் அதிக வாஞ்சை வைத்திருந்தான். ஒருவேளை இதனாலேயே சிவாஜிக்குக் கெடுதல் அதிகரிக்குமோ? எப்படியிருந்தாலுஞ் சரி; அவள் உதவி கிடைத்திருப்பது நிரம்பப் பலம்தான்.

"நான் என்றால் ஆனமட்டும் அவள் என்னை மணம் புரிவதைத் தடுத்துப் பார்த்தேன்.

"அவள் இசையவில்லை?"

"அவள் என்னஎன்னவோ சொல்லுகிறாள்."

"என்ன?"

"எனக்கு முதலில் நம்பிக்கை யில்லை"

"அவள் பொய்யே பேசமாட்டாள்."

"அப்புறம் அவள் சொல்லுவது சத்தியமென் றறிந்தேன்."

"சரி."

"அப்புறம், தப்பியோடுவதைப் பற்றிச் சொன்னாள்."

"என்ன?".

இவ்விதமிருக்கையில், சிவாஜிக்கு தலைநோவும் உடம்புவலியும் மிகுதியாய் உண்டாயிற்று. இவ்விரண்டினாலும், அவன் நிரம்பத் தொல்லைப்பட்டுக்கொண் டிருக்குங்

தருணத்தில், தப்பியோடும் எண்ணத்தையே எல்லோரும் மறந்தார்கள். அவுரங்கசீப் தன்னுடைய வைத்தியர்களில் முதன்மையானவர்களையெல்லாம் அனுப்பினான். நான்கு அல்லது ஐந்து நாட்களாயின. நாளுக்குநாள் வியாதி குறைந்து கொண்டே வந்தது. சிவாஜியைஇரப்பத் தொலைப்படுத்தியது மனோவியாதிதான். இப்படியிருக்குந் தருணத்தில், தம்ஜிக்கு ஒரு யோசனை தோற்றியது

"மஹராஜ்! ஒரு காரியம்."

"என்ன?"

"வழியேற்பட்டுவிட்டது"

"என்ன வழி?"

"உங்களுக்கு வியாதி நீங்கிற்றல்லவா?

"ஆமாம்."

"அதற்காக—"

"என்ன?"

"உங்களுடைய சிநேகிதர்களுக்கு பக்ஷிபங்கள் அனுப்பலா மல்லவா?"

"இருக்கட்டும்."

"அதிலே சந்தேகம் வருவதற்கு இடமில்லையே?"

"இல்லை."

"கூடைக்குள்—"

"நான் இருந்துவிடுவதா?"

"ஆமாம்"

"யார் கொண்டுபோவது?"

"நான்."

"முடியாது."

"பார்ப்போம்."

"பைத்தியக்காரத்தனம்."

"யாரையாவது—"

"யாரிடம் நம்பிச் சொல்லலாம்?"

"நாங்கள் ஒருவரும் எடுத்துச் செல்ல முடியாதோ?"

"முடியும். ஆனால்."

"என்ன?"

"அகப்பட்டுக் கொள்ளுவீர்கள்."

சிவாஜி ஒருவரிடமும்தான் ரௌஷினாராவைப் பார்த்ததையும், ஜெயசிங்கிடம் பேசியதையும் சொல்லவில்லை. சிவாஜி அநேக குறைபாய் ஒருகாரியத்தை விடமாட்டான். அவன் செய்வது நிச்சயமாயிருந்தால் அதை வெளியிடுவான். அல்லாவிடிற் சும்மா விருந்து விடுவான் இன்னமும் அவனுக்கு ஜெயசிங்கிடமாவது ரௌஷினாராவிடமாவது முழுதும் நம்பிக்கை யேற்படவில்லை.

யாவரும் தூக்கம்வந்தபொழுது யோசனை செய்துகொண்டே யிருப்பார்கள். பகலாயிருந்தாலும் கனவுகண்டுகொண்டேயிருப்பார்கள். சிவாஜி, அடிக்கடி தான் பூனாவிலிருந்துகொண்டு தனது இராஜ்ஜியத்தை ஆண்டுகொண்டிருப்பதாகப் பகலிலேயே கனவுகண்டிருக்கிறான். அப்புறம் திடீரெனவெழுந்து. தனது நிலையைக்குறித்து, பிரமைபத்துக்கிப் பான்.

இன்னும் இவ்விதமே துக்கித்துக்கொண்டிருக்குந் தருணத்தில், ஒரு வீட்டில் சில வேலையாட்களைத் தவிர வேறே வருமேயில்லை.

"மஹராஜ்!

"யார்?" என்றான், திடீரெனக் கனவினின்றுமெழுந்து,

"நான் தான்."

"யார்?"

"வரச்சொன்னார்கள்."

"யார்?" என்றான் பித்தம் பிடித்தவன் போல் திரும்பவும்.

"தெரியவில்லை?"

"தெரிந்துகொண்டேன்" என்று இங்குமங்கும் பார்த்தான்.

"ஏன்? உடம்பு சரியாயில்லையோ?"

"என்ன விசேஷம்?'

'ஒன்றுமில்லையெனத்தான் மேலே போர்த்திருந்த" ஆடையை வீசியெறிந்தாள்.

"ரௌஸினரா!"

மஹராஜ்!" என ஓடிவந்து முத்தமிட்டாள்.

"வேடிக்கை செய்தாயோ?"

"ஆமாம்."

"எனக்கு ஒன்றுமே தெரியவில்லை."

"யோசனையிலாழ்ந்திருந்தீர்கள்.

"ஆமாம்."

"நான் முன்னமேவந்து பார்க்கமுடியவில்லையேயென்று எனக்கு நிரம்பவருத்தமாயிருக்கின்றது."

"ஏன்?"

"உடம்பு சரியாயிருக்கின்றதா?"

"எங்கேபோகும் அது"

"மஹாராஜ்! நிரம்பக்கவலை வேண்டாம்."

"என்ன சொல்லுகிறாய்?"

"கவலை வேண்டாம்."

"ஏன்?"

"சொல்லுகிறேன்."

"சொல்."

"தங்களுடைய ஆலோசனையை யறிந்தேன்."

"எது?"

"பக்ஷியக்கூடை."

"எப்படி?"

"அறிந்துகொண்டேன்."

"எப்படி?"

"எப்படியாயின் என்ன?"

"சொல்"

"மஹாராஜ்! காவலாளிகளெல்லாம் எனது வசமன்றோ?

"எப்படி?"

"வேண்டிய திரவியங்கொடுத்தேன்!"

"நீயென் றறிந்தார்களோ?"

"ஐயோ!"

"ஏன்?"

"அதையவர்க ளறியக்கூடாது."

"பின்னை யெப்படி யவர்களை வசப்படுத்தினாய்?"

"திரவியத்தால்."

"யார் கொடுத்தார்களென்று அவர்கள் அறிந்தார்களா?"

"இல்லை."

"அறிவார்களா?"

"இல்லை"

"அப்புறம்"

"பக்ஷியக்கூடை சமாசாரம் எனது தகப்பனை எட்டும் போலிருந்தது. அதை நானறிந்தேன்."

"அப்புறம் என்றான் மீசை துடிக்கச் சிவாஜி.

"ஏராளமாகப் பொருள்கொடுத்து அச்செய்தி வெளி வராமற செய்தேன்."

"என்ன செய்யலாம்?"

"ஆதலின், சீக்கிரம் படுத்தவேண்டும்."

"எதை?"

"அதைத்தான்"

"என்ன பயன்?"

"பயனுண்டு"

"இபபொழுதும யாரேனும் கேட்டுக்கொண் டிருக்க போகிறார்கள்."

"பயமில்லை."

"நிச்சயமாய்த் தெரியுமா?"

"தெரியும்"

"கிடக்கட்டும்; என்னபயன்?"

"சொல்லுகிறேன்; மஹாராஜ்!"

"முடியாது."

"பக்ஷியக்கூடை இவனுக்கொன்று உண்டல்லவா? என்றுதனது மார்பைத் தொட்டுக் காண்பித்தாள்.

"இருககட்டும்."

"உண்டா? அல்லவா?"

"உண்டு."

"மனம் குளிர்ந்து; மஹராஜ்! அதிலே, எல்லாவற்றையும் விட உன்னதமான பக்ஷியமிருக்கும்,"

"நான் அறிந்துகொள்ளவில்லை."

"அது என்னவென்று தெரிந்துகொள்ளவேண்டுமோ!

"ஆமாம்".

"அவசியம்?"

"ஆமாம்."

"எனக்கு அதைவிட உருசியானது வேறெதுவுமில்லை."

"அது என்ன அது?"

"இதுதான்" என்று சிவாஜியைச் சுட்டிக்காட்டி, அவனைத் தழுவிக்கொண்டாள்.

சிவாஜி முகம்மலர்ந்தது.

உடனே, ஆகாயத்தில் மேகம் வந்து மூடிக்கொள்ளுவதுபோல, முகத்தில் கலக்கம் காணப்பட்டது.

"ஏன்? மஹராஜ்!"

"என்ன?"

"கலக்கம்"

"உன்னால் என்னைச்சுமக்க முடியாது."

"வெகு நன்றாயிருக்கிறது."

"அகப்பட்டுக்கொள்ளுவாய்."

"இல்லை" எனக்கெஞ்சுகுறலிற் சொன்னாள்.

"லொளஸிஞசா! ஒருகாரியம் செய்யத்தொடங்கினால் அதை நன்றாகச் செய்ய வேண்டுமல்லவா?"

"ஆமாம்."

"ஆதலின், நீ யோசித்தகாரியம் அவ்வளவு சரியாக வராது."

"ஏன்?"

"முதலாவது, கூடையை உன்னால் சுமந்துபோக முடியாது"

"முடியும்"

"இரண்டாவது, நீ பெண்பிள்ளை."

"ஆனலென்ன?"

"மூன்றாவது, பின்னல் ஒருவேளை யோடுவோமென்பதற்குக்கூட வில்லாமற் போயவிடும்"

"ஐயா!"

"நான் சொல்லுவது பிசகா?"

"அல்லவா!"

"எப்படி?"

"என்னுளைமட்டும் யோசித்துப் பார்த்தேன். எனது சிற்றறிவிற் கெட்டியமட்டும் தப்பியோடுவதற்கு வழியொன்றுமே ஏற்படவில்லை. தாங்களும் தீரயோசனை செய்திருப்பீர்களே."

"ஆ—மா—ம்."

"அம்மாதிரியே, நான் தங்களைக் கூடுவதற்கும் வேறு வழி யொன்றுமேயில்லை மேலே."

"சரி."

"செய்யவேண்டியதை யோசனை பண்ணும்போழுது, இதுதான் நிரம்ப இலகுவான வழியாகத் தோற்றிற்று"

"இதுவா?"

"ஆமாம்."

"எனக்குத் தோற்றவில்லை"

"ஏனெனில், கொஞ்சமேனும் சந்தேகத்திற்கே இடமில்லை"

"அப்படியா?"

எப்பொழுதும் புத்தி நுட்பத்தையுடைய சிவாஜி இம்மாதிரி சிறுபையனொருவன் உபாத்தியாயர் சொல்லுவதைக் கேட்பதுபோலக் கேட்டுக்கொண்டு வந்தான். யாருக்கும் நிலைமாறினால், அதினால் வரும் துன்பங்கள் பலவுள. நல்ல புத்திசாலியாயிருக்கு மொருபையனை நிரம்பவும்தொந்திரவு படுத்தி படிக்கச்சொல்லிவந்தால், சிலநாட்களுக்கெல்லாம் அவன மந்தியாய்விடுவான். உயர்ந்த வேலைபார்க்க யோக்கியதையுள்ள ஒருவனை மிகத்தாழ்ந்தவேலையில் போட்டு கொஞ்சநாட்களுக்கு வைத்திருந்தால், அவன் சிலநாட்களுக்களுக்கெல்லாம், சகலயோக்கியதையையும் இழந்துவிடுவான். இது மனிதர்களுக்குமாத்திரமல்ல; மற்ற ஜீவப்பிராணிகள் விஷயங்களிலும் இவ்விஷயத்தின் உண்மையைக் கண்டுகொள்ளலாம். மேலும், மனிதக்கூட்டத்தாரிடத்தும் இவ்விஷயம் உண்மையேவியாசர், வால்மீகி, பாணினி, பதஞ்சலி, காளிதாஸன், சங்கரர், இராமனுஜர் முதலியோரைப் பெற்றதான நமதுதேசம் பிறனுளுகையில் அகப்பட்டது. முதல் அம்மாதிரியான ஓர் இரத்தினத்தை உண்டாக்கச் சக்தியற்றுப்போய்விட்டது. இது நிற்க.

"ஆமாம்; மஹாராஜ்" என்றாள் ரௌஷினாரா.

"அப்புறம்?"

"சீக்கிரம் நமது காரியத்தைச் செய்து முடித்துக் கொள்ளவேண்டும்."

"சீக்கிரமென்றால்"

"நாளையன்றைக்கே"

விஷய விடியக்கதை கேட்டுவிட்டு, 'சீதைக்கும் இராமனுக்கும் உறவென்ன?' என்று கேட்ட ஒருவன்போல, 'முடிவாக என்னசெய்ய வேண்டுமென்கிறாய்?' என்றான் சிவாஜி.

சிவாஜியேலிருந்த ஆசைமிகுதியினால், ரௌஸினாரா, நிரம்பப்பொறுமையுடன். இதுவரையிலும் சொன்னவற்றையெல்லாம திரும்பச்சொன்னான் சொல்லியபிறகு! அவனுக்கு ஒரு சந்தேகம் மனதில் தட்டியது" கூடையில் கோட்டைவாசல் வரையில் பக்ஷியக்கூடையைக் கொண்டுபோய்விடலாம் அப்புறம்?"

இதற்கன்றோபதில் வேண்டும்.

சற்றுநேரம் கவலையிலாழ்ந்திருந்தாள்; கையைப்பிசைந்தாள்;

எழுந்தாள் உட்கார்ந்தாள்.

சரேலென "மஹராஜ்! முடித்துவிட்டேன்" என்றாள்.

"எதை?"

"கவலையை."

"எப்படி?"

"நாளையே, பக்ஷியத்தை கூடைகூடையாய் வெளிக்கும் அனுப்பத்தொடங்கவேண்டியது"

"சரி."

"நாளையன்றைக்கு—மறந்துவிட்டேன்."

"ரகுநாத் என்பவர் கூடையிலெல்லாம் பக்ஷியத்தை நிரப்பிவைத்து, எடுத்துக்கொடுக்கவேண்டியது."

"ஆகட்டும்."

"நாளையன்றை அந்த சமயத்தில் தாங்கள் உடம்பு அசௌக்கியமெனக்கூறி, போய்படுக்கபோவதாக உள்ளே தாங்கள் பிறரறியாமற்போவீர்கள். அப்புறம ஒரு கூடைக்குள் தாங்கள் இருந்துவிடுவீர்கள்."

"சரி."

"ரௌஸினாரா, ஓர் வேலைக்காரியாக, பழயக்கூடை எடுத்துப்போக வேண்டி அவ்விடம் வருவாள்."

"வரட்டும்."

"தாங்களிருக்கும் கூடையை யெடுத்துக் கொள்ளுவாள்."

"அப்புறம்."

"கோட்டை வாசற்படியை யாருமறியாதபடி அநேகம் பெயர்களுளொருத்தியாகத் தாண்டிவிடுவாள்."

"சரி" என்றான் முகமலர்ச்சியுடன்.

"சமீபத்தில்—ஒன்றையும் மறக்கவில்லையே?—இல்லை."

"சொல்" என்றான் அவசரத்துடன்.

"என்ன சொன்னேன்?"

"சமீபத்தில்—".

"சமீபத்தில், தம்ணாஜி குதிரையை வைத்துக்கொண்டு, காத்துக்கொண்டிருப்பார்."

"எப்படி?"

"எப்படி யென்ன?"

"ரௌஸினாரா!" என்று அவளைத்தழுவிக்கொண்டான்.

"மஹாராஜ்!"

"ரௌஸினாரா! இன்றுதான் உன்னையறிந்தேன்" என்று சேர்த்தணைத்தவளை அவளை முத்தமிட்டான்.

"மஹாராஜ்! இன்றுதான் எனது ஜன்மம் சாபல்யமா யிற்று."

"எனக்கும் அப்படியே."

"இல்லை."

"ஆமாம்."

"நானன்றோ பாக்கியசாலி?"

"ஏன்?"

"நானன்றோ பாக்கியசாலி! நீங்களன்று" என்றான் பிக்கானந்தத்துடன்.

"ஏன்?"

"சொல்லவேண்டுமா?"

"ஆமாம்."

"உங்களுக்கு நான்கிடைப்பது ஒரு பெரிதல்ல."

"ஏன்?"

"அப்படித்தான்."

"நான் என்னசொல்லலாம்?"

"எனக்கு நீங்கள் கிடைப்பது அரிது."

"அப்படியே செய்துவிடுவோம்."

"தடையென்ன?"

"நேரமாய்விட்டதோ?"

"ஆமாம்."

"நான்போய்வருகிறேன்."

"சரி."

"மஹாராஜ்! மறப்பீர்களோ?"

இச்சமயத்தில், வாசலில் யாரோவந்து காத்துக்கொண்டிருப்பதாகச் செய்தி தெரிந்தது.

"ஒரே குதியாய்க் குதிப்பேன்; இதில் பிழைத்தாலுஞ் சரி; மரித்தாலுஞ்சரி. வலையிலகப்பட்டுக்கொண்ட பிறகு தப்பிப்பதற்கு பயந்துகொண்டிருப்பது எங்கேயாவது வழக்கமுண்டோ? நான் யோசித்ததே முட்டாள்த்தனம். அகப்பட்டுக்கொண்டால் தொலைத்து விடுவது நிச்சயம்தான். அகப்பட்டுக்கொள்ளாமலிருப்பதென்றால் இங்கேயேயிருப்பதுதான். இங்கேயேயிருந்தால்,என்னஎன்ன ஆபத்துக்கள் நேரிடுமோ? ஆதலின் துணிந்தே பார்ப்பேன். சரி; நான் துணிந்தால் மட்டும் என்ன செய்யமுடியும்? எனக்கு உதவிபுரிவதற்கு யாரேனும் இருக்கவேண்டாம்? இங்கிருந்து நான் எப்படித் தப்பியோடுவது? எனக்குத் தெரிந்து பத்துப்பெயர், தெரியாமற் பத்துப்பெயர் என்னைக் காவற்காக்கிறார்கள். ஆ! ரௌஸினா நட்டாற்றில் முழுகித் தத்தளித்துக்கிடக்குமொருவனுக்குத் தொப்பக்கட்டை அகப்பட்டாற்போல், நீ எனக்குத்தோன்றினாயோ? ஆனால், தொப்பக்கட்டை அகப்பட்டது; தப்பித்துவிடலாமென்பதற்கிடமேயில்லையே. நீ, நான், இருவரும் சேர்ந்து மூழ்கிவிடுவோம்போலிருக்கிறதே. சரியான உதவியிருந்தால், நாமிருவரும் தப்பியோடலாம். எனக்கு முன்னமே இரண்டு மனைவிகளிருந்தபோதிலும், உன்னையும் காரியவசத்தினால் கல்யாணஞ்செய்துகொள்ளும்படி நேரிடுகிறது. ஒருவனுக்கு மூன்றுமனைவியா? பாபம்! பாபம்! ஆனால், நான் எனது மனமொப்பி ரௌஸினாவைக்கல்யாணஞ் செய்துகொள்ளவில்லை, எனது குலதெய்வமே

இவ்வுருவாய் என்னைக் காப்பாற்றவந்தபோதும்—கிடக்கட்டும்; அவள் மாத்திரமிருந்து என்னைத் தப்புவிக்கமுடியாது. ஆதலின் வேறொருவன் உதவி எனக்கு அவசியமாய் வேண்டும். நம்பினாற்கேடுவரும்; நம்பாமலிருந்தாலோ காரியமொன்றும் நடவாது. என்னகஷ்டம்! யாரை நம்பலாம்; ஜெயசிங்கை நம்பி அன்றைக்கு எவ்வளவு சொல்லியும், அவர் எனக்கு வாக்குத்தத்தம் செய்தும், அதற்குமேல், அவர் எனக்கு வேறொன்றுஞ் சொல்லவில்லை. அவரால், ஒன்றுஞ்செய்ய முடியவில்லையா? போதும் போதும். இஃதென்ன யோசனை? நான் விழுந்துபோய்விட்டேன். இப்பொழுதுமா நான்மஹாராஷ்ட்ர அதிபதி? நான் அவுரங்கசீபின் கைதியன்றோ? ஆதலின் நான் இக்காரியஞ் செய்வதற்குத் துணிவதற்குத்தடையேன்? நான் என்னைச்சிவாஜியாக நினைத்துக்கொண்டு இக்காரியஞ் செய்யலாமா, செய்யலாகாதாவென யோசித்தேன். சரியாக யோசித்துப்பார்த்தால், ஓர் கைதியன்றோ இக்காரியம் செய்கிறான். அதாவது கைதி, மஹாராஷ்ட்ர அதிபதியாகப் பார்க்கிறான். அகப்பட்டால் ஒன்றும் நஷ்டமில்லை. கைதி மரிக்கிறான். அகப்படாவிட்டால், சிவாஜியாகிறான். வெகு வேகமாய்ப்பறக்குமோர் குதிரை, மூர்ச்சையாய்ப் போகும்வரைக்கும் ஓடு மல்லவா? எனக்கும் அதற்கும் என்ன வித்தியாசம்?" இவ்விதம் சிவாஜி தனக்குள்ளே நிச்சயம் செய்துகொண்டு, தனது வேலைக்காரனைக் கூப்பிட்டு தம்ஞாஜியைக் கூப்பிடச்சொன்னான்.

தம்ஞாஜியைக்காணோம்.

தம்ஞாஜி சாதாரணமாய் தினந்தினம் வெளியேபோய் ஊர்ச்செய்தியை விசாரித்துவருவது வழக்கம். இன்றைய

தினம் தெருவோடு போய்க்கொண்டிருக்கும்பொழுது ஒரு துருக்கன் வந்து அவன் சமீபத்தில் நின்றுகொண்டு,

"ஐயா! வந்தனம்" என்றான்.

"வந்தனம்."

"நான் சக்கரவர்த்தியால் உங்களிடம் அனுப்பப்பட்டேன்."

"ஏன்?"

"அவசியமான காரியமொன்றிருக்கிறது."

"சொல்லலாமே."

தம்மாஜிக்கு நிரம்ப ஆச்சரியம் ஜனித்தது.

"தங்கள் எஜமானுகிய சிவாஜி சிறையிலிருக்கிறாரென்பது தெரியுமோ?"

"இது என்ன கேள்வி?"

"தயவு செய்யவேண்டும்."

"ஆமாம்."

"அவர் மஹாராஜாவை நிரம்பப் புண்படுத்திவிட்டார்."

"எப்பொழுது?"

"தெரியாததுபோலப் பேசுகின்றீரே."

ஏதோ "ஒனுய் ஆட்டுக்குட்டிக்கதை" இருக்கின்றதென மனத்தில் சங்கித்து "கொஞ்சம் சொன்னுல் அறிந்துகொள்ளுவேனென்றான்."

"வேடிக்கைதான்."

தாமதிப்பதில் ஒன்றும் பயனில்லையென்பதையறிந்து தம்மாஜி,

"மேலே சொல்லும்" என்றான்.

"சரி! சற்று என்னிடம் வேடிக்கை பண்ணிப்பார்த்தீர்; கிடக்கட்டும். அதற்காக, சிவாஜியை தண்டிக்கவேண்டுமென்று மஹாராஜ் எண்ணங்கொண்டார்."

"என்னதற்காக தண்டிப்பது?" என்று மனத்தினுள் எண்ணி, ஆயினும் பேசுவதிற் பயனொன்றுமில்லை யென்றறிந்தான். பிறகு வெளிப்படையாக.

"அப்புறம்!" என்றான்.

"தண்டனை யென்னவென்றறியவேண்டுமோ?"

"ஆமாம்."

"அரசனை நிந்தித்தால் என்ன?"

"தெரியாது."

"சும்மா பொய் சொல்லாதேயும்."

தம்ணாஜி தலைவிதியை நினைத்து நிரம்பத்துக்கித்தான்.

திருமபவும் அத்துருக்கன் "உமக்கா தெரியாது?" என்றான்.

"தெரியாது, ஐயா!" என்றான் கோபத்துடன்.

"இப்பொழுது அறிந்துகொள்ளும். உயிரைவாங்கிவிடுவோம்."

"ஏன்?"

"குற்றத்திற்காக?"

"என்னகுற்றம்?"

"தெரியாதோ" எனச்சிரித்தான்.

தம்ணாஜி பேசவில்லை.

"மேலே?"

"மேலே என்ன?"

"அதுதான் ஐயா முக்கியம்."

"சொல்லும்."

"அதற்குத்தான் சக்கிரவர்த்தி என்னை உம்மிடமனுப்பினார்."

"சொல்லும்."

"சக்கிரவர்த்திக் கட்டளைப்படி செய்வீரா?"

"சொல்லும், ஐயா!"

"செய்வீரா? ஐயா!"

"சொல்லும், ஐயா! சொல்லுகிறேன் பிறகு."

"சரிதான். வெகு அதிகாரமாக இருக்கிறதே."

"அதிகாரமென்ன? நான்போகிறேன்."

"கோபித்துக்கொள்ளாதேயும். நில்லும்."

"சரி; சொல்லும்."

"ஜாகீர் கொடுப்பார்."

"அப்புறம்."

"நவாப் பட்டம்கொடுப்பார்."

"யாருக்கு?"

"உமக்கு."

"எதற்காக?"

"சொல்லுவேன் கேளும்."

"சொல்லும்."

"நிரம்பப்பொருள் கொடுப்பார்."

"எதற்காக?"

"பொறும் ஐயா! உயர்ந்த வேலைகொடுப்பார்."

"எதற்காக? என்பதற்கு முதலில் விடைதருவீர்."

"நமது சக்கிரவர்த்தியின்கீழ் வேலை செய்வதற்கு."

"சக்கிரவர்த்தியார்?"

"அவுரங்கசீப்."

"எனக்கு அவர் சக்கிரவர்த்தியல்லவே."

"பின்னையார்?"

"சிவாஜி."

"ஹா! ஹா!! ஹா!!!"

"ஒருவாரம் பொறும்"

"ஏன்?"

"சக்கிரவர்த்தி பறந்துபோய்விடுவார்."

"எவ்விடம்?"

"விண்ணுலகிற்கு."

"அப்படியா?" என்றான் அடங்காத துக்கத்துடனும் கோபத்துடனும் தம்ணாஜி. இருந்த கோபத்திற்கு அத்துருக்கனை இச்சமயம் தவிரவேறு எச்சமயத்தும் வீழ்த்தியிருப்பான். இச்சமயம் ஏதாவது கோபமாகச் செய்துவிட்டால், அவுரங்கசீபின் காரியம் நடப்பது எளிதாய்ப்போய் விடுமெனப்பயந்து, சும்மா விருந்தான்.

"பதில் சொல்லும்."

"என்ன வேண்டும்?"

"நான் கேட்டேனே."

"அதற்கா?"

"ஆமாம், தூங்குகின்றீரோ?"

"இல்லை? இல்லை?" என மலர் விழித்தான்.

"யோசிக்கவேண்டும்" என்றான் ஒன்றும் அதிகமாகப் பேசப்பிடிக்காமல் தம்ணாஜி.

"என்னவோ பதில் சொல்லுகிறீரே.

"என்ன சொல்லுவோம்.

"உண்டு, இல்லை பொருளையாவது"

"சக்கிரவர்த்தியிடம் யோசித்துச் சொல்லுவேனெனச் சொல்லும். தயவு செய்து பொறுக்கச் சொன்னேனென்று கேட்டுக் கொள்ளும்."

"இந்நேரம் பேசி இதுதானா?"

"தயவு செய்யவேண்டும். போய் வருகிறேன்."

"கோபிக்கின்றீரோ?"

"இல்லை."

"சற்றிருமே."

"இல்லை. போகவேண்டும்."

"சரி."

எனவே, இருவரும் வேறு வேறு பக்கங்களில் திரும்பிப் போய் விட்டார்கள்.

"ஆ! செல்வமே! நீ தாஸிபோன்றவளன்றோ? இன்றைக்கொருவனிடமும் நாளை யொருவனிடமும் இருப்பவள் நீ. பாண்டவர் முதல், நந்தன், சந்திரகுப்தன், அசோகன், ஜயபாலன் முதலியோராண்ட இப்புவி துருக்கனிடம் சென்றது. நீ போகும்பொழுது சற்றேனும் யோசித்துப் பார்த்தாயோ? உன் குணம் தான் அப்படி. குடிகளெல்லாம்—ஐயோ! அவர்களிடம் சுபிக்ஷத்தைப் பெற்ற குடிகளெல்லாம்—சற்றேனும் யோசியாமல் செல்வம் எங்கே சென்றதோ அவ்விடத்தையே பூஜை செய்கின்றனவோ! இராஜ்யபாரம் பண்ணுவதென்பது இலகுவான காரியமன்று. நமது முன்னோர்கள் எவ்வளவோ பயப்பட்டு அதைச்செய்து கொண்டு வந்தார்கள். துருக்கனுக்கு ஒன்றுமே லக்ஷியமில்லை. இப்படியிருந்துங்கூட பகவான் தர்மார சாஸிக்கப்பட்ட இப்புவியானது இவ்வளவு நாட்களுக்குத்

துருக்கனிடம் எப்படித்தானிருந்ததோ! செல்வமே! உனக்கு கண்ணில்லையோ? உனக்கு அறிவு கிடையாதோ? என துமஹாராஜாகிய சிவாஜிமஹாராஜாவை வரியாது, அப்பாதைத் துருக்கனை வரிந்தாயே! இம்! இப்பொழுதோ! அவுரங்கசீப் அசையா நிலையிலிருக்கிறான். என்ன செய்யலாம்? ஐயோ! நிழல்போன்றும் விதி என்னோடு கூடவே தொடர்ந்துகொண்டு நான் எக்காரியத்தைச் செய்வதாக யோசித்தாலும் அதைச் செய்யத்தொடங்கினாலும், என் காரியங்களை யெல்லாம் தொலைக்கின்றதே! சில வருஷங்களில் மஹாராஜ்சிவாஜி இஜ்ஜம்பூத்வீபிலுள்ள எல்லோரையும் நடுங்கச் செய்தார். நானும் கையில் வாளெடுத்தது முதல் அவருடன் கூடவே யிருந்து வருகிறேன். மரிப்பதும் கூடவே மரிப்பேன். அவரிங்கு அடைபட்டதன்றோ?—" என்று சற்றுத்தயங்கி அழுதான். "அங்கிருந்து சைனியம் கொண்டு வரலா மென்றாலோ? அது முழுவதும் பிசகு. சரி; எல்லாவற்றிற்கும் விதியே காரணம். ஜெயசிங்கு என்ன செய்வான்? எவரையும் நம்பாத பாதகியும் போக்கிலியுமான ப்ரஷ்டனுக்கு அதிர்ஷ்டமிருக்கின்றது. எனக்கா ஜாகிர்? நவாப்பட்டமா? மஹாராஜா பட்டமா? நிறைந்த செல்வமா? உயர்ந்த வேலையா? என்ன நினைத்தான் அத்துருக்கன்? என்னுடைய எஜமானரை சாவினுமன்றோ விட்டேன்! இன்னொருதடவை நான் யாரேனும் இப்படிக் கேட்பாரேயாகில், அவரை உயிரோடுவிடேன். அந்தோ! சிவாஜிமஹாராஜ் பைத்தியாக்காரத்தனமாயிருந்து விட்டார். அக்காட்டுப் புலியை நம்பலாமா? என்னவோ! இது விதியின் செயல். இக்காரியம் தாமாகச் செய்துகொள்வதன்று. ஒருவனுக்குக் கெடுதி வருவதாயிருந்தால், அவன் புத்தியும் அதற்கேற்றபடிதான் செல்லு

மோ? இப்பொழுது அவர் சிறையி லடைபட்டிருக்கிறார். சரி; இருக்கட்டும்.—அவர் மரித்தாலென்ன? அப்புறம் அவு ரங்கசீப் கொடுப்பதை வாங்கிக்கொண்டு சௌக்கியமாயிரு ப்பேனோ? நான் சும்மாவிரேன். துருக்கனைத் தொலைக்கும் வழி பார்ப்பேன். என்னுடைய எல்லாக் காரியங்களும் தவறிபோனவையாகவே யாய்விடட்டும், நான் தோற்றாலும், அடங்கவில்லை யென்பதே எனக்குப் புகழாகும். இவ்வூ ரின் வெளியிலுள்ள தோட்டங்களும், கோட்டை வா[illegible] யும், இன்னும் எனது எஜமானர் வந்த வழியும், எல்லாம் ம[illegible] தில் ஒருவித அருவை உண்டாக்குகின்றன. எனக்கு அவ ற்றைப் பார்க்கவே பிடிக்கவில்லை. நான் இப்பொழுது வேறு எங்கே போவது? இரவு பகலா யோசித்து தப்பி யோடும் வழியைக் கண்டுபிடிக்கலாமென்றாலோ? காலத்தி ற்கேற்றபடி புத்தியும் தோற்றமாட்டேன் என்கின்றதே அந்தோ! நான் ஊரைப்போய்ப் பார்த்தபொழுது, தோட் டம் தனது பிரகாசத்தை யிழந்தது. கோட்டைமதில், ஏ ழைமை நிலையடைந்த பெரியோன் போலக்காண்கிறது நல்ல சினேகிதன் அகப்படாமல் தவிக்கும் மனம் போல ஊரெல்லாம் தண்ணீரில்லாமல் வருந்துகிறது. விதிய ால் அழிந்த என்னைப்போல மரத்தில் பழமில்லை. துஷ் டர் மனதில் மண்டும் இருளைப்போன்று, ஊரெல்லாம் நில த்தில் புல் பூண்டு நிரம்பி யிருக்கின்றன.—இருக்கட்டும் மஹா ராஜாவைப் போய்ப் பார்ப்பேன்"—என தனக்குத் தானே சொல்லிக்கொண்டு வாடிய தேகத்துடனும், துக்கமே வடிவ மெடுத்தது போன்ற முகத்துடனும், தம்முஜியிடம் வந்து சேர்ந்தான்.

"மஹாராஜ்!"

"யார்?"

"தம்ஞஜீ."

"தம்ஞஜி!"

"மஹாராஜ்!—,, எனக்கூவிக் கதறினன்.

"தம்ஞஜி! என்ன?"

"அகப்பட்டு விட்டோம்.'

"என்ன?"

"இன்று ஒரு செய்தியைக் கேள்வியுற்றேன்."

"என்ன?"

"சொல்லவே முடியவில்லை."

"சொல்லாமல்?"

"பாதகன்."

"மேலே'

"தங்களை—"

"சொல்லப்போகிறேனே?"

உடனே தம்ஞஜி மௌனமாய் நின்றான்.

"எனக்கு இது முன்னமே தெரியுமே."

"முன்னமேயா?" என்றான் ஆச்சரியமடைந்த தம்ஞஜி.

"எனக்கு—?'

"சொல்லியென்ன?"

"என்ன செய்வது?"

"நீ தான்சொல்லு."

"எனக்குத்தெரியவில்லை."

"பின்னை?"

"அதற்காகத்தான் ஓடிவந்தேன்."

"தம்ஞஜி! யத்தனித்து விட்டேம்."

"என்ன!"

"காரியத்தை."

"எக்காரியத்தை?"

"தப்புவதற்கு வேண்டிய காரியத்தை."

"மஹராஜ்!"

"உனக்குச் சொல்லவேண்டுமென்பதுதான் என் கவலையாயிருந்தது."

"மஹராஜ்!" என்றான் சந்தோஷத்துடன்.

"ஜெயஸிங்கும் நம்முடைய சிநேகிதன்."

"அப்படியா?"

"ஆமாம்."

"அவர்கூடவா?"

"ஆமாம்."

"அவரிடம் விஷயமெல்லாம் எடுத்துச்சொன்னேன்."

"தாங்களா?"

"அவர் என்னை விடுவிக்கவேண்டுமென்ற வெண்ணங்கொண்டார்."

"அப்புறம்?"

"நான் கலியாணம் செய்து கொள்ளப்போகிறேன்."

"எப்பொழுது?"

"இப்பொழுது."

"வேடிக்கையா?"

"இல்லை."

"பின்னை?"

"ரௌஷிநாரா தெரியுமா?"

"தெரியாது"

"அவள் அவுரங்கசீபின் மகள்."

நிஜமா?"

“ஆமாம்.”

“அப்புறம்?”

“அவளும் நமக்கு உதவி செய்வாள்.”

“என்ன முடியும்?”

“பின்னுங் கேள்.”

“நாளையன்றைக்கோர் விருந்து.”

“ஆமாம் நானுங் கேள்விப்பட்டேன்.”

“வெகு நன்றாகநடக்கும்.”

“மறந்தேன்—எதற்காக விருந்து?”

“எனக்கு உடம்பு சௌக்கியமானதற்காக.”

“மஹாராஜ்! நான் தங்களையறியவில்லை.”

“கேள். சொல்லுகிறேன்.”

“சரி.”

“அவ்விருந்துக்கு வரக்கூடாத கனவான்களுக்கும், வந்த ஏழைகளுக்கும் பக்ஷியம் கூடையில் கொடுக்கப்படும்.”

“அப்படியா?”

“கூடையில் எத்தனையோ வித பக்ஷியங்களிருக்கும். அறிந்தாயோ?”

“இல்லை.”

“தம்ஹாஜி! நீயுமா?”

“மஹாராஜ்! ஏழைத்தனமும் கஷ்டமும் வரும்பொழுது புத்தியும் மழுங்கிவிடும்.”

“தம்ஹாஜி! வருந்தாதே.”

“பின்னே?”

“ஒரு கூடையை ஓர் ஏழைத்தருக்கச்சி எடுத்துப் போவான்.”

“எங்கே?”

"கோட்டை மதிலுக்கு."

"அப்புறம்."

"கூடை நிரம்பக்கனமாகவிருக்கும்."

"வாசற்படிக்குச் சற்று தூரத்திற்கப்பால் தம்ளுஜி இரண்டு குதிரைகளுடன் நிற்பான்."

"மஹராஜ்! தூருக்கச்சி ரௌஷிஞராவோ?"

"தம்ளுஜி!"

"அப்புறம்?"

"அப்புறமென்ன?"

"அப்புறம்?" என்ருன் குதூகலத்துடன்.

"அப்புறமென்ன ஒன்றுமில்லே."

"மஹராஜ்! நாளேயன்றைமட்டும் பொழுது போகவேண்டுமே! என்னசெய்யலாம்."

"பதை பதைக்காதே."

"சரி."

"ஆனல் முடியும் வரைக்கும் நிச்சயமொன்றுமில்லே."

"முடியுவதற்குத் தடையென்ன!"

"ஏதோ பகவான் தான் துணை."

"மஹராஜ்! தங்கள் கட்டளையை யறிந்தேன். இனிச் செய்யவேண்டுவனவற்றைச் செய்யப்போகிறேன்.

"தம்ளுஜி! ஏன் அழுதாய்?"

"மஹராஜ் நடந்த செய்தியைச் சொல்ல மறந்தேன்."

"என்ன?"

"மிகவும் முக்கியம்."

"ஆனல்சொல்லு."

பிறகு தம்ஞூஜி தான் துருக்கனைச் சந்தித்ததையும் துருக்கன் சொன்ன விஷயங்களையும் ஒன்று விடாமற் சொன்னான்.

"அவ்வளவு செய்தானா?"

"ஆமாம்."

"தம்ஞூஜி இனி தவக்கப்படக்கூடாது."

"செத்தாலுஞ் சரி: பிழைத்தாலுஞ் சரி."

"அப்படியே."

"துருக்கன் அவ்வளவு பாதகன்."

"கிடக்கட்டும்."

"பிழைத்திருக்கும் வரைக்கும் நிச்சயம் சொல்லமுடியாது."

"ஏன்?"

"அப்படியிருக்கின்றது செய்தி."

"ஏன்?"

"உனக்குத் தெரியாது?"

"காரியங்கள் நடத்தவேண்டியது தானே!"

"ஆமாம்."

"தாமதப் படுத்தவேண்டாம்."

"இல்லை."

"போய் வருகிறேன்."

## அத்தியாயம். 7

### தப்பியோடினார்கள்.

"சத்தியம்தான்; நமக்கு அதிர்ஷ்டமிருந்தால், சமுத்திரத்தின் அடியிலிருக்கும் விலையிலாமாணிக்கங்கூட எவ்விதமாகவாவது நமக்குக் கிடைக்கும். இல்லாவிடில், எவ்விதத்திலும் மேன்மையை யுடைய ஒரு துருக்கன்பெண் என்மேல் ஆசைபூண்டு என்னைத் தப்புவிக்க முயலுவானேன்? இனி எனக்குப்பயமேயில்லை; நான் தடையில்லாமல் தப்பியோடி இராஜ்ஜியபாரம் வகிப்பேன். ஈதென்ன சப்தம்? ஆமாம்; பாட்டுடனும் கூத்துடனும் வாத்தியகோஷம் கேட்கின்றது; இச்சப்தத்தைக்கேட்டால், கூட்டம் நிரம்பத்தெருவிலிருக்குப்போலிருக்கிறது. நான் போய் பார்க்கிறேன். சரிதான்; அவுரங்கசீப் அதோ போகிறான். இன்று ரம்ஜான் பண்டிகையோ? அவன்கூடவா ஜனங்களுடன்கூட தெருவே வருகிறான்? ஆச்சரியம்! ஆச்சரியம்!! எப்பொழுதும் சண்டைபோட்டு அயர்ந்துபோய் இப்பொழுதுதான் தனது ஜனம் தன்னை நல்லவனென்று சொல்லவேண்டுமென்று ஆசைப்பட்டான் போலும். தெய்வமே தன்னைத் தொழுபவர்களைப் பார்த்துத்தானும் ஆனந்திக்கவேண்டுமென்று நினைத்தது போலிருக்கின்றது. அதுகிடக்கட்டும். நான் உள்ளே போகிறேன்." என்று உள்ளேபோய், "சபாஷ்! இதுதான் நல்ல சமயம். இச்சந்தடியில் தான் நாம் இலகுவாய்த் தப்பித்துப் போகமுடியும் 'பவானி! உன்னைப்பணிந்தேன்" என்று சொல்லிக்கொண்டே சமையற்கட்டண்டை சிவாஜிசென்றான்.

"ரகுநாத்!" என்று தனது வேலைக்காரனைக் கூப்பிட்டு "என்ன செய்தி?" என்றான்.

"மஹாராஜ்! தடையில்லை" என்றான் முகமலர்ச்சியுடன்.

"தம்னாஜி எங்கே?"

"கோட்டை வாசற்படியண்டை சென்றார்."

"அதற்குள்ளேயா?"

"ஆமாம்."

"ஏன்?"

"ஏனென்றால்?"

"பொழுதிருக்கின்றதே"

"சற்று இருட்டுகிறபொழுதே புறப்படவேண்டும்."

"அகப்பட்டுவிட்டால்?"

"வேறு நேரமில்லை."

"ஏன்!"

"இருட்டிய சிறிதுநேரத்திற்கெல்லாம் கோட்டைக் கதவைச் சாத்திவிடுவனென்றோ?"

"ஆ!"

"பயமில்லை."

"ஏன்?"

"சற்று நேரத்திற்கெல்லாம் இச்சந்தடியில் தப்பியோடிவிடலாம்."

"வெகுபெயர் பக்ஷியங்கள் வாங்கிக்கொண்டு போனார்களோ?"

"ஆமாம்"

"இன்னும் ஏன் ரௌஸினாரா வரவில்லை?"

"வந்துவிடுவார்கள்."

"மறந்துவிட்டாளோ?"

"ஏன் பயப்படுகிறீர்கள்?"

"இன்னும் வரவில்லையே."

"சரியான பொழுதிற்கு வருவார்கள்."

"இங்கே ஒருவருமில்லையே."

"இல்லை."

"நமது சமாசாரம் வெளியாகிவிடுமோ?"

"ஏன்?"

"யாரேனும் ஒற்றர்கள் எப்பொழுதாவது கேட்டுக் கொண்டிருப்பார்களேயானல்?"

"ஒருவருமில்லை."

"நீ போ."

"அங்கு வேறு காரியமில்லை."

"மஹாராஜ்! ரௌஸினரா வருகிறாற்போ லிருக்கிறது."

"ஆமாம்."

*　　　*　　　*

*　　　*　　　*

## அத்தியாயம். 8

### மூன்றுநாள்.

"ரௌஸினரா! நாம் புறப்பட்டு இரண்டுநாட்களாயின. எவ்வளவு வேகமாய் குதிரையை விட்டுக்கொண்டுவந்தபோதிலும் நாம் டெல்லியிலிருந்து இன்னும் நூறுமைல்தானே வந்திருக்கிறோம். நாம் எங்கு தங்கினாலும் நம்மை வந்து பிடித்து விடுவானே வெனப்பயமாயிருக்கிறது. கரடுமுரடான வழிகளாலும், மலைச்சாரலின் வழிகளாலும், நமது தம்முஜி ரகுநாத் ஆகியவிரண்டுயிர்த்துணைவர்களுடன் வந்தோம். இனி நம்மால் தங்காமல் போகமுடியாது. ரௌஸி

ஞரா! தங்குவோமா?" என்றான் சிவாஜி. "எனக்கும் சிரம பச் சிரமமாயிருக்கிறது."

"தம்ணாஜி! ரகுநாத்! நிரம்ப வெயிலாயிருக்கின்றது. இங்குதங்குவோம்."

"அப்படியே மஹாராஜ்" என்றார்கள் இருவரும்.

உடனே இருவரும் சிவாஜியிடம் விடைபெற்றுக்கொண்டு சற்றுதூரத்திற்கப்பால் போய் மரத்தடியிற் படுத்துக் கொண்டு பேசிக்கொண்டிருந்தார்கள்.

"ஆஹா! நாம் எவ்வளவுதூரம் நடந்திருக்கிறோம்! மலையும், கல்லும், பட்டணங்களும், கிராமங்களும், காடுகளும், கண்ணாடிபோன்ற அருவிகளும் தாண்டிவந்திருக்கிறோம். யமுனையும், ஜீலமும் சுற்றிச்சுற்றியோடும் நாடுகளின் வழியாகவும், மசூதிகளும், கோபுரங்களும், கோரிகளும், வாசல்களும், நிரம்பிய ஊர்களின் வழியாகவும், ஆகாயத்திலிருந்து விழுந்துவிட்டனவோ வெனக்கருதும், மலைக்குன்று நிரம்பிய காடுகளின் வழியாகவும் வந்தோம். ரௌஸிஞரா! சரஸ்வதியின் ஓட்டம்பார்த்தாயோ? அளவான மழை பெய்து செழிப்படைந்து பசுமையாயிருக்கும் சோலைகள் சரஸ்வதியின் கரையிலிருந்தனவே? அது எவ்வளவு ரமணீயமா யிருந்தது பார்த்தாயோ? மிகச்சாதுவாய், பருத்த முடியுடன் எத்தனை பசுகள் மழையினாலும் நீரோட்டத்தாலும் நிரம்பப் பசுமை யடைந்திருந்த நிலங்களில் மேய்ந்து கொண்டிருந்தன? ஆ! நாம் வரும் வழியில் நீர் மிகுதியால் ஸிந்து நதியின் கரையில் தடதட வென்று விழுந்ததைமறந்தாயோ? நாம் வந்த வழிநேரான வழி யன்று. இன்னும் அச்சப்தம் என் மனத்தைவிட்டு நீங்கவில்லை. இடும்பாசுரன்

கர்ச்சனையைப் போன்று, சுற்றிலுமிருக்கும் பள்ளத்தாக்கு களை யணுகிய மலைகளில் தாக்கி, திரும்பவும்நாலாப்பக்கங்க ளிலும் அச்சப்தம் திருப்பி யொலிக்கப் பட்டது. இதோ பார்க்கின்றாயே இம்மலைகள் அடர்ந்த காடுகளால் போர்க்க ப்பட்டிருக்கின்றது. அந்தோ! என்ன ரமணீயமான சந் தன வாசனை வீசுகின்றன. இவற்றைப் பார்த்தவுடன் என க்கு எனது ராஜதானியாகிய ராஜகிரியின் ஞாபகம் வருகின் றது. நமோநம; பவணி! ராமசந்திரா! சர்வலோக சரண் யா! சகல நன்மையையும் எல்லா பிரஜைகளின் மேலும் வருஷிக்கின்ற பகவ! என்று தலை குனிந்து நான்கு திக்கை யும் நோக்கி நமஸ்காரம் செய்து விட்டு, "வேதங்களாக்கி யோனே! சங்கசக்ர கதாபாணி! சகல தேவதைகளுக்கும் பிதாவே! இம்மலையே நமது மனத்தைக் கவரக்கூடிய ஓர் பெரிய காக்ஷி! எவ்வளவு உயரம்? மலைச்சிகரங்களி லெல் லாம் கரேலென மேகங்கள் உட்கார்ந்து கொண்டிருக்கின் றன. ரௌஸினுரா! காட்டுக்கோழிகளெல்லாம் கத்திக் கொண்டிருக்கின்றன. பயங்கரமான கற்பாறைகளின் மேல் அடர்ந்த கொடிகளாய வீடுகளிருக்கின்றன. அவ் விடம் எத்தனை பிராணிகள் கூடு கட்டிக் கொண்டிருக்கின் றன. பார்த்தாயா?" சற்று சிவாஜி தயங்கினுன்.

"நாதா! காது கொடுத்துக் கேளுங்கள். கூடுகளினி ன்றும் கரடிக் குட்டிகளெல்லாம் கத்துகின்றன. யானை உரைந்து எத்தனையோ மரக்கிளைகளை சரித்துத் தள்ளி அதி னின்றும் குளிர்மையானவும், பரந்தவும், ரமணீயமானவு மான வாசனை அவற்றினின்றும் வெளிப்படுகின்றது பார் த்தீர்களா? இது நிரம்பவும் அடர்ந்த காடுதான். ஆ!

அதோ பாருங்கள்! அதோ அச்சிகரத்தைச் சுற்றி ஒரு கருமேகம் போகின்றது பார்த்தீர்களா? அது தங்கினல் அங்கு வருஷத்து சிந்துவின் கரைத்தோட்டங்களை யெல்லாம், செழிப்பிக்கின்றது. இதோ கீழ்க்காற்று நமக்கு வீசுகின்றது. ஆ! வெகு பலமாகக் கத்துகின்றது; அச்சப்தம், அழகியமயில் சந்தோஷத்தினுல் கத்துவதுடன்கூடச் சேர்ந்து மலைக்குகைகளினின்றும் பிரதி யொலிக்கின்றது. இது சரியான வெயில்வேளை. கருடன் மரத்து நிழலில்வந்து ஒண்டிக்கொண்டிருக்கிறது. ஆற்றோரத்திலிருக்கும் பழத்தைக்கொத்தித்தின்ற வாத்து, வெயில் தாங்க மாட்டாமல் இதோவிருக்கும் ஏரியில் முழுகப் போகின்றது. போதும்! மிகவும் சோர்ந்திருக்கிறேன். மஹாராஜ்! சற்றுத் தூங்குவோம்."

"ரௌஷிஞரா! நானும் சோர்ந்திருக்கிறேன்."

"ஆனல் நித்திரை செய்யுங்கள்."

"சரி! நமது விதி."

"பயமென்ன? இன்னும் கொஞ்ச நாட்களுக்குத்தானே."

"சரிதான்!" என்றுன் பரிதாபத்துடன்.

காரணமில்லாமல் சிவாஜியின் மனங்கலங்கி யிருந்தது. நாடு, நகரம், தகப்பன் தாய் மதம், செல்வம், பரிஜனங்கள், சுகம், முதலியனவற்றையெல்லாம் பரிஹரித்து விட்டு சிவாஜியொருவனையே நம்பி யோடிவந்தவளைப் பார்த்து யார் தான் ஆச்சரியப்படாமலிருப்பார்கள்? ராஜபுத்திரியா யிருந்தவள் இப்பொழுது மரத்தடியில் துணியை விரித்துப் போட்டுப் படுப்பதென்ருல், சிவாஜி பரிதாபப்படுவதற்குத் தடை

யென்ன? எல்லாம் செய்தாள்? சிவாஜி அவளை மோசம் பண்ணுமலிருப்பானென்பது என்ன நிச்சயம்? அதை அவள் கொஞ்சமேனும் நினைக்கவேயில்லை. அந்நினைப்பே அவளைக் கொன்றுவிடும். சிவாஜிக்கும் இது ஓர் அதிசயமாகவே தோற்றிற்று. அதிசயம் தான் அவன் செய்ததும். இரண்டு பெண்டாட்டி யிருக்கும் பொழுது மூன்றாவது ஒரு துருக்கப்பெண்ணை விவாகம் செய்து கொள்ளுவது அதிசயமன்றோ? ஆனால் அவளுக்காக அவன் இக்காரியஞ் செய்யவில்லை. ராமதாஸ்ஸ்வாமி மஹாராஷ்ட்ர தர்மத்தை நிலைநிறுத்தி வேதமதமாகிய மகாதர்மம் அழியா வண்ணம் பாடுபடச் சொன்னதற்காக வன்றோ இக்காரியம் செய்தான்? சிவாஜி யில்லாவிடில் மஹாராஷ்ட்ரமே யில்லை. மஹாராஷ்ட்ரமில்லாவிடில் வேதமதம் அழிய வேண்டியது தான். மேலும் சிவாஜியின் மந்திரிகள் இவன் வரப்போகிறான் வரப்போகிறானென்று பகற்கனு கண்டு கொண்டிருந்தார்கள்.

சிவாஜி, ரௌஷினரா இருவரும் தூங்கிவிட்டார்கள்.

தம்ணுஜி, ரகுநாத் இரண்டு பெயர்களும் எழுந்து வந்தார்கள்.

"ரகுநாத்! பார்த்தாயா?"

"பார்த்தேன்."

"அலங்கோலம்."

"நாம் போய்ச்சேர்ந்தால் அப்புறமென்ன?"

"சேரவேண்டுமே!"

"பகவான் தயவு."

"இக்கஷ்டமும் அநுபவிக்கும்படி நேர்ந்ததே."

"நமது விதி.—"

"ஆமாம்."

"நம்மை எவ்வாறு விடும்.?"

"போய்ச்சேரும் வரைக்கும் சரியான உயிரேயிராது."

"ஆமாம்."

"அஸ்தமித்துப் போய் விட்டால் காட்டில் திண்டாட வேண்டுமே."

"சோர்ந்து தூங்குகிறார்களே ?"

"சற்றுப் பொறுக்கட்டுமா ?"

"ஆகட்டும்."

"ஆனால் வழி தெரியாமற் போய் விடப்போகிறது."

"ஆனால் எழுப்புவோம்."

"நீ எழுப்பு."

"மஹாராஜ்! மஹாராஜ்!"

"அயர்ந்து தூங்குகிறார்கள்."

"மஹாராஜ்!" என்றான் சற்று உரத்து.

"இன்னும் எழுந்திருக்க வில்லையே."

"மஹாராஜ்!" என்றான் மறுபடியும்.

"ரகுநாத்! சற்றுப்பொறுக்கட்டும். நீபோய் குதிரைகளுக்குத் தண்ணீர் காண்பித்து அவற்றைப் பயணத்திற்குத் தயார்செய்."

"அப்படியே!" என்று ரகுநாத் புறப்பட்டுப்போனான்.

## அத்தியாயம். 9

### வனம்.

"மஹாராஜ்! இப்பொழுது மை இருளாயிருக்கிறபடியி னால், நாம்போகவேண்டியதிக்குக்கூட நமக்கு நன்றாகப்புலப் படவில்லை. ஆகலின் இதோ விளக்குத் தெரிகின்றதே இவ் விடத்திலிருந்துவிட்டு, சந்திரவெளிச்சம் கிளம்பியவுடன் புறப்பட்டு மஹாராஷ்ட்ரம் நோக்கிச் செல்லுவோம். நன்றாக யோசித்தால், நாம் ஓரிடத்தும் தங்கக்கூடாது. சரி, இதோ கோயில் வந்தோம். இக்கோயில் வராகப்பெருமாள் கோயி லாயிருக்கிறது. பகவானுக்கும் துணையெவருமில்லை. இருள் நீங்கும் வரையில்நாம் அவருக்குத்துணையா யிருந்துவிட்டுப் புறப்பட்டுப்போய்ச்சேருவோம்" என்று தம்ஞாஜி சொல்ல, நால்வரும் கோயிலில் வந்து உட்கார்ந்துகொண்டார்கள்.

* * *

"நான்கூடவா கவலையற்றுத்தூங்கினேன்? தூக்கத்தின் மகிமையே மகிமை; இராப்பகலாக விழித்துக்கொண்டிருக் கும் என்னைக்கவலையினின்றும்விடுவித்து சற்று இன்பங்கொ டுத்தது. இவ்வின்பம் கிடக்கட்டும்; விதியின் செயலெல்லாம். என்னைக்கெடுத்து எனது விரோதியைப் பலப்படுத்துவதாக விருக்கிறது. நான் ஒரு பெரிய சூத்திரதாசனாகவன்றோ இருக்கிறேன். நான் இல்லாவிடில், ஓர் பெரிய நாடகத்தின் பயன் உலகத்தோருக்கில்லாமற்போய்விடும். பல்லோரை யும் சரிப்படுத்தி, நம்மவர்களையெல்லாம் ஒன்றுசேர்த்து, வீணாகத் தூக்கிக்கொண் டிருந்தனவற்றிற்கெல்லாம் உயிர் கொடுத்து, நயத்தாலும், பயத்தாலும், பொய்யாலும் துரு க்கர்களை வென்று, மஹாராஷ்ட்ரதர்மத்தையும், வேதமதத்

தையும், நிலைநிறுத்த வேண்டியவன் யான்? விதியின் செயல் என்னவோ?" என்று தனக்குத்தானே சொல்லிக்கொண்டிருக்குந்தருணத்தில் குதிரையடிச்சப்தம் கேட்டது. "திருடன் பிழைப்பு என்ன பிழைப்பு? பகலெல்லாம் ஒருவருமறியாதபடி அடிக்கடி ஜனசமூக மிராதவழிகள் வழியாகப் போகவேண்டியிருக்கிறது. எத்தனையோ காவலாளிகளிருந்தும் அவர்களினின்றும் தப்பியோடிவந்துவிட்டோம். ஆயினும் நான் நிர்பயமாகவே யிருக்கவில்லை. யாரேனுமொருவன் என் பின்னால் தானாகவருவானாகில், அவன் என்னைத் தான் பின்தொடருகிறானென்று நினைக்கும்படியாயிருக்கிறது. மனிதனை அவன் செயலேதான் பீடிக்கின்றது; ஆதலின் தப்பியோடி வந்திருக்கும் நான் பயப்படவேண்டாததையெல்லாங்கண்டு பயப்படுகிறேன். நான்போனாலும் போகிறேனென்றாலும் கௌஸினாராவன்றோ கதியற்றுப் போய்விடுவாள். குதிரையடிச் சப்தம் இன்னும் பலமாகக் கேட்கிறதே. இவ்விடத்தில் குதிரைகள் வருவதற்குக் காரணமென்ன? இன்னும் சற்றுக்கவனித்துக்கேட்பேன். மேலும், இவை பிரயாணிகளின் குதிரைபோன்றும் தோற்றவில்லை. ஏனெனில் அடியோசை யளவாயிருக்கின்றன. அவை, வெகு வேகமாய் பந்தயக்குதிரைகள் போன்றும் ஓடிவருகின்றனவே. என்னவிசேஷம்? தம்னாஜி! தம்னாஜீ!! தம்னாஜீ!!!"

"மஹாராஜ்!"

"சீக்கிரம்."

"மஹாராஜ்! என்ன?"

"கவனித்துக்கேள்."

'சற்று சத்தத்தைக்கேட்டுவிட்டு பிரமித்துநின்முன். மலரவிழித்தான்.

பிறகு "என்னசெய்வோம்?"

"ஏன்?"

"நம்மைத்தான் தொடருகிருர்கள்."

"நிச்சயமாய்?"

"ஆமாம்."

"ஏன்?"

"இக்காட்டில் வேறுயார் வருவார்கள்?"

"எனக்கும் அப்படியே தோற்றுகிறது."

"என்ன செய்யலாம்?"

"வரவர ஓசை கிட்டவே கேட்கின்றதே."

"ஆமாம்! ஆமாம்!!"

"பதருதே."

"ரகுநாத்!"

"மஹாராஜ்!" என்முன் ரகுநாத்.

"குதிரையை அவிழ்த்துவிடு."

"என்?"

"சீக்கிரம் அவிழ்த்துவிடு."

"ஏன்?"

"சட்! சொன்னகாரியத்தைச் செய்."

"மஹாராஜ்!" என்று சற்று மலரவிழித்து விட்டு, "நம்மைப் பின் தொடருகிருர்களோ?"

"ஆமாம்! ஆமாம்!!"

"ரௌஷினூரா"! என்முன் சிவாஜி.

ரௌஷினூரா எழுந்திருக்கவில்லை.

"தம்ஞாஜி! விளக்கை யணைத்துவிடு."

"இதோ மஹராஜ்"! என்று விளக்கை யணைத்தான்.

ரௌஷிநாராவை மெல்லத்தூக்கி கற்சிலையின் பின்னே படுக்க விட்டு விட்டு சிவாஜி மரத்தின் மேல் ஏறி உட்கார்ந்தான். ரகுநாத் குதிரையை அவிழ்த்து விட்டு விட்டு அண்டையிலிருந்த ஏரிக்கரையிலுள்ள புதரினுள்ளே உட்கார்ந்தான். தம்ஞாஜி அச்சிறிய கோபுரத்தின் மேலேறி ஒருவர் கண்ணிலும் படாதபடி அதன் மேல் வளர்ந்திருந்த அரசின் மறைவில் தொத்திக்கொண்டிருந்தான்.

"டப்! டப்! டப்! டப்!" என்று சத்தம் தான் கேட்டுக்கொண்டிருந்தது. விநாடிக்கு விநாடி அதன் பலம் அதிகரித்துக்கொண்டிருந்தது சுற்றிலும் மலையா யிருந்ததினால் எவ்விடமிருந்து அச்சத்தம் உண்டாயிற்றென்று தெரியவில்லை. மேலும் மலையினின்றும் இச்சத்தத்தின் பிரதிதொலியும் வந்துகொண்டிருந்தது. சிவாஜி மனம் மாத்திரம் கோயிலினுள்ளேயே யிருந்தது.

"இறங்கிப்போய் அவளை யெழுப்பிச் சொல்லிவிட்டு வரலாமோ? வெகு அழகுதான். இதுதான் கெட்டுப்போவதற்குவழி. அந்தோ! அவள் ஒருவரையுங்காணாமல் வெளியே எழுந்துவந்துவிட்டால்? உஷ்! இறங்குவோம்." என்று சொல்லி இரண்டுகிளை யிறங்குவான். அச்சமயத்தில் சப்தம் சற்று அதிகரிக்கும். உடனே மறுபடியும் மேலேயே போய் உட்கார்ந்துகொள்ளுவான். சிவாஜியின் மனம் பதைபதைத்துக் கொண்டே யிருந்தது. தம்ஞாஜியும் ரகுநாதும் அசையாமலிருந்தார்கள். ரௌஷிநாரா எழுந்திருக்கவேயில்லை.

"டப்! டப்! டப்! டப்!"

சற்றுப்பொழுதிற்கு சத்தமொன்றுமே கேட்கவில்லை.

"எல்லாம் கனவுதானே?" என்று சிவாஜி நினைத்தான்.

"பொறுப்போம்.

"ஐந்தாறு வேட்டின் சத்தம்கிளம்பிற்று.

"எங்கே?

"தெரியவில்லை.

இவர்களுடைய குதிரைகள் இருந்த இடமே தெரிய வில்லை.

"நாதா! நாதா!!"

"அந்தோ! என்னசெய்யலாய்?"என்று மரத்தினின்றும் கீழே யிறங்கினான்.

"டப்! டப்! டப்! டப்!"

"நாதா!

"அம்மா! வாய்திறவாதேயுங்கள்" என்றான் கோபுரத்தின்மேலே யிருந்த தம்ணாஜி.

"யார் அது?

"டப்டப்! டப்டப்! டப்டப்! டப்டப்!"

ரௌஸினரா அச்சப்தத்தைக் கேட்டு நடுங்கிப்போய் இருந்தவிடத்திலேயே உட்கார்ந்துவிட்டாள்.

நாற்பது தூருக்கக்குதிரை வீரர்கள்காணப்பட்டார்கள். அவர்களுக்குத் தலைவன் தன்னை அவுரங்கசீபின் ஆளாக விருக்கச் சொன்னவரென்பதைத் தம்ணாஜி யறிந்தான்.

அசைவற்ற பதுமைகளைப் போல நால்வருமிருந்தார்கள்,

குதிரை வீரர்கள் அங்கு வரும்பொழுது தான் சந்திரோதயமாயிற்று. அவர்கள் மத்திய யனம முதல் இது வரையில் ஓயாது ஓடி வந்திருக்கிறார்கள். தெய்வத்தின் செயலேல அற்புதம் சிவாஜியையும் ரௌஷிறாவையும் அறிந்தவர்கள் வந்தவழியில் எவருமேயில்லை. அப்படியிருக்கும் பொழுது கூட யாரோ நான்கு பெயர்கள் குதிரைகளின்மேலேறிச் சென்றார்களென்றும் அவர்களுக்குள் ஒருத்தி பெண்ணென்றும வழியில் இவர்களைப் பார்த்தவரனேகர் அவர்களுக்கு செய்தி சொல்லிக்கொண்டே வந்தார்கள். எப்படியோ தெய்வாதீனமாக இப்பணத்தொகுதி சிவாஜி ரௌஷிறாவையே பின் தொடர்ந்தது.

"மஹமத்ஷா ! இங்குச்சற்று தங்குவோம்" என்றான் ஒருவன்.

"ஆனால் எல்லாரும் இறங்குங்கள்" என்று ஆமத் கட்டளையிட்டான். எல்லோரும் குதிரையினின்றும் இறங்கினார்கள்.

கோயிலண்டையிலுள்ள ஏரிக்கரையி லுட்கார்ந்து கொண்டு, அனேகம் பிரிவுகளாகப் பிரிந்து, அவரவர்கள் தங்கள் தங்களுக்குத் தோற்றியனவற்றைப் பற்றிப் பேசிக்கொண்டிருந்தார்கள்.

"இம்ரான் ! மலையெலியென்று சொன்னேனே!"

"ஆமாம்." என்றான் இம்ரான்.

"என்ன கெட்டிக்காரத்தனம்?"

"ஆமாம்.

"ஒரு நாள் முழுதும் செய்தி யெப்படித் தெரியாமலிருந்தது?"

"ரம்ஜான் பிண்டிகையில் நாம் ஒன்றையும் கவனியா திருந்து விட்டோம்."

"பிசகு செய்தோம்.

"அப்புறம் எப்படித்தெரிந்தது?"

"ரௌஸினாராவை ஷஹா பார்க்கவேண்டு மென்றார்."

"அப்புறம்?"

"அவளைக் காணோம்."

"அதற்காக?"

"தேடச் சொன்னார்கள்."

"அதற்கும் சிவாஜிக்கும் சம்பந்தமென்ன?"

"அவள் சிவாஜி வீட்டுக்கு வேலைக்காரி வேடம் தரித்துப்போனாளாம்."

"யார் பார்த்தார்கள்?"

"காவலாளிகள்."

"ஏன் பிடிக்கவில்லை?"

"என்ன நிச்சயம்?"

"அப்படியென்றால்?"

"தங்கள் விழிகளை யவர்கள் நம்பவில்லை."

"ஏன்?"

"ராஜகுமாரத்தி தெருவேயப்படி வருவாளா"

"எப்படி?"

"கூடையொன்றைத் தூக்கிக்கொண்டு."

"கூடையென்ன?"

"சிவாஜிகூடை."

"வேடிக்கை.

"அப்புறம் வெளியே குதிரை யிருந்தது."

"அப்புறமென்ன."

"அப்புறமென்ன."

"அரசர் என்ன சொன்னார்."

"என்ன சொல்வது."

"நிரம்பக் கோபித்தாரோ."

"கோபிக்கமாட்டாரோ."

"அப்புறம்."

"யார் இவ்வளவு செய்தாரென்று விசாரித்தும் பார்த்தார்."

"ஒன்றுமே தெரிந்துகொள்ள வில்லையென்று இங்கு சொல்லிக்கொண்டார்கள்."

"அப்படியல்ல."

"பின்னை."

"ஜெயசிங்கு—"

"அவரேயா."

"ஆமாம்."

"பின்பு."

"அவர்தான் இதற்கெல்லாம் காரணம்."

"நாமெல்லாம் அவனை உயர் பதவிக்குக் கொண்டு வரக் கூடாதென்று சொன்னோமல்லவா."

"ஆமாம்."

"நம் பேச்சையார் கேட்டார்கள்."

"அப்படிச் சொல்லக்கூடாது."

"அச்சமயம் அவர் உதவி வேண்டியிருந்தது."

"எதற்கு."

"சிவாஜியை யடக்குவதற்கு."

"இப்பொழுது."

"இப்படிச் செய்வாரென்று யார் நினைத்தார்கள்?"

"அவுரங்கசீப் என்னசெய்தார்?"

"என்ன செய்வது?"

"ஜெயசிங்கை—"

"என்ன செய்யலாம்."

"கொன்றுவிடுவது."

"அப்பா ! அது நிரம்பத்தொந்தரவை விளைவிக்கும்."

"என்ன?"

"உனக்குத் தெரியாது."

"என்னவோ பேசுகிறாயே."

"உனக்குத் தெரியாது. சும்மாவிடு."

"ஏன்?"

"இப்பொழுது ஒன்றுஞ் செய்யக்கூடாது."

"எப்பொழுது செய்யவேண்டும்."

"சிவாஜியைப் பிடித்து விட்டு."

"பிடிக்காவிடில்."

"அப்புறம் பார்த்துக் கொள்ளுவோம்."

"பிடித்தப்புறம் என்ன செய்வதாக யோசனை?"

"விசாரணை செய்து இருவரையும் கொலை வாங்கி விடுவது."

"ரௌஷினாராவை."

"ஒரு தடவை கொன்றுவிட வேண்டு மென்கிறார் ஒரு தடவை மன்னிப்போமென்கிறார்."

"அப்படியா?"

"என்ன செய்வாரோ."

"கொன்றுவிடுவதே நிறம் அந்தப்பயலோடு ஓடிய வளை நாம் மன்னிப்பதே சரியன்று. ஆயினும், தன் வயிற்றிற் பிறந்த மகளன்றோ?"

"தன் தேகத்துப் புண்ணுக்கு இரங்குவதோ."

"உதாரணம் நன்றுதான்."

"நான் சொல்லுவது தப்பா?"

"கொஞ்சமேனும்."

"வேடிக்கை பண்ணுகிறாயே."

"பின்னையென்ன?"

"எனக்கு அவர்கள் பேரில் நிரம்பக்கோபம் வருகின்றது."

"ஏன்?"

"ஏனென்றால்?"

"எனக்கு அவர்கள் எப்படியாவது தப்பியோடி விட வேண்டுமென்றிருக்கிறது."

"வெகு அழகு தான்."

"பின்னையென்ன."

"வெகு அழகு தான்."

"நமக்கென்ன?"

"பாதகனன்றோ நீ."

இச்சமயத்தில் அக்கூட்டத்திலொருவன் ஒரு குதிரை அரை மைல் தூரத்திலிருப்பதைப் பார்ப்பதாகச் சொன்னான். உடனே தங்கள் தங்கள் குதிரைகள் ஓடிப்போயினவா அல்லவா என்று எல்லோரும் பார்த்தார்கள். அவரவர் குதிரை அதது கட்டப்பட்ட விடத்திலேயே நின்று கொண்டிருந்தது. குதிரை காணப்பட்டது பொய்யெனச் சிலர் செப்பினார்கள். சிலர் நிஜமாகவு மிருக்கலாமென

நினைத்தார்கள். ஆனால் ஒரு நிச்சயம் மாத்திரம் உண்டு. என்னவென்றால் குதிரை காணப்பட்டது மெய்யாயின், எவனோ மனிதன் சமீபத்தில் இருக்க வேண்டும். மனிதன் உயிரோடு இருப்பானேயாகில் குதிரையை விட்டு விடுவானா? அவன் ஏதோ காரணத்தால் இறந்து போயிருந்தால், இம்மாதிரி குதிரை தனியே திரியும். ஆதலின் என்ன செய்வது என்று அவர்களுக்குள் ஒரு நிச்சயம் ஏற்படவில்லை. ஆனால் அவர்கள் வந்தகாரியமும் முக்கியமானதன்றோ? ஒரு வேளை குதிரைமேல் வந்தவன் தங்களைக் கண்டு ஒளிந்து கொண்டிருக்கலாகாதோ. அப்படியு மிருக்கலாம்.

"இம்ரான் ! என்ன செய்யலாம் ?"

"குதிரையைப் பிடிப்போம். ஆமத்!"

"ஆனால் கிளம்பு."

"மற்றவர் என்னசெய்வது."

"சற்று சற்று தூரத்திற்கப்பால் எல்லோரும் இக்காட்டைச் சுற்றிக் கொள்ள வேண்டும்."

"நலம் தான்."

"ஆமாம்."

"இல்லாவிடில்."

"கையிலகப்படாமல் போய் விடுவான்."

"இவ்வளவு கஷ்டமெடுத்துக் கொள்ளுகிறோம். அது ஏதோ காட்டில் மேயவந்த குதிரைபோலிருக்கிறது."

"அப்படி முழுதும் நம்பக்கூடாது."

"சரிதான்."

"எல்லோரும் கலையுங்கள்"

உடனே எல்லோரும் ஒவ்வோரிடத்திலும் யாரும்தப்பி யோடாதபடி பார்த்துக் கொள்ளத் தங்கி விட்டார்கள்.

ஏரிக்கரையில் மாத்திரம் மூவர் இருந்தார்கள். ஏனெனில் எவ்விடமிருந்து ஓடிவந்தாலும் அவ்வழியாய்த் தான் ஓடவேண்டும். அவ்வழியைச் சரியாகப் பாதுகாத்துக் கொண்டால் தப்பியோடாமற் பிடித்துக் கொள்ளலாம். மேலும் ஏரியோ மிகப்பெரிது. அதில் குதித்து விட்டால் வாள் துப்பாக்கி முதலியனவற்றை வைத்துக்கொண்டிருக்கும் துருக்கருக்கு சிவாஜீயோடு நீந்தமுடியாது. ஆதலின் சிவாஜி ஏரியில் குதிக்கமுடியாமலும் பார்த்துக்கொள்ள வேண்டும். இம்ரான் ஆமத் இவ்விருவரும் குதிரையைப் பிடிக்கச் சென்றார்கள்.

* * * *

குதிரை யகப்பட்டு விட்டது. டெல்லியிலிருந்து வந்த குதிரை யென்பதையு மறிந்து கொண்டார்கள்.

ஆதலின் சிவாஜி இச்சுற்றளவுக்குள் தான் இருக்க வேண்டும். சந்திரவெளிச்சத்தில் தம்முஜிக்கும் ரகுநாதுக்கும் சிவாஜி சைகை காண்பித்தான். ரகுநாத் அசையாது எழுந்தான். தம்முஜி அதைப் பார்த்து விட்டு தானும்மெல்லக்கீழே யிறங்கினன். கீழே நின்ற மூன்று துருக்க வீரர்களும் பரலோகஞ் சென்றார்கள். அரை விநாடிப்பொழுதில் அவர்கள் உடை சிவாஜி, தம்முஜி, ரகுநாத் இவர்கள் மூவர் பேரிலு மேறிற்று. அசை வற்று உட்கார்ந்து கொண்டிருந்த ரௌஷிநாரவைத் தூக்கிக்கொண்டு வந்து குதிரைமேல் சிவாஜி வைத்துக்கொண்டான். நிர்பயமாய் மூன்று குதிரைகள் விரைவாய்ச் சென்றன. மலை வெளி

யைப் பிடித்துவிடுவோம் என்று சொல்லிக் கொண்டே தம்ணாஜி குதிரையை விரைவாய்ச் செலுத்தினான். சிவாஜியும் ரகுநாதும் வாய் திறக்கவேயில்லை. ரௌஷினாராவின் நினைவு அவனுக்கே யில்லை. துருக்கர் ஒருவரும் கொஞ்சமேனும் சங்கிக்கவேயில்லை. சில நிமிஷங்களா யிருக்கலாம். சிவாஜியுடன் கூடவிருந்த ரௌஷினாராவை ரௌஷினாராவென்றறியாமலே சிலர் கண்ணுற்றார்கள். தாங்கள் துருக்கர் கக்ஷியைச் சேர்ந்தவர்களென்று துருக்கர் நிச்சயமாய் நினைக்கவேண்டுமென்று மலையெலி! மலையெலி! என்று உரத்திக் கூவிக்கொண்டே சிவாஜியும் தம்ணாஜியும் குதிரையை விரைவாக நடத்தினார்கள். தம்ணாஜி தான் இப்படிக்கூப்பிடுவதால் துருக்கருக்குச் சந்தேகம் வராமலிருக்க வேண்டுமென்று கூப்பிடப்போக அதுவே கெடுதியை விளைத்தது. ஏன்? மலையெலி! மலையெலி! என்று கூவவே சிவாஜி தான் அகப்பட்டு விட்டானென்று எல்லோரும் நினைத்து எல்லோரும் இவர்களண்டை ஓடிவந்தார்கள்.

"தம்ணாஜி!"

"மஹாராஜ்! மோசம் போனோம்."

குதிரை வீரர் கொஞ்சமேனும் சந்தேகிக்காமலே இவர்களோடு கூட ஓடிவந்தார்கள். அவர்களுள் ஒருவன் சிவாஜியண்டை வந்து வேடிக்கைக்காக என்னப்பா பாரம் என்று ரௌஷினாராவை யிழுத்துக்கொண்டான்.

"தம்ணாஜி! தம்ணாஜி!" என்று கூவினான் சிவாஜி.

"நாதா! நாதா!!"

"ரௌஷினாரா!"

"அடே திருடன். விடாதே, பிடி" என்று பலகுரல்கள் கேட்டன.

"மஹாராஜ் மஹாராஷ்ட்ரம்."

"நாதா!"

"ரௌஷிஞரா!"

"மஹாராஜ் மஹாராஷ்ட்ரம்."

மூன்று குதிரையும் பறந்துவிட்டன. ரௌஷிஞரா அகப்பட்டதும் அவர்கள் சிலவிநாடிகள் தங்கி யிருப்பார்கள். அதுவே எத்தனையோ நாட்களாகி விட்டன. சிவாஜியைக் காணோம். மலையெலி தப்பி விட்டது.

## அத்தியாயம் 10

### ரௌஷிஞரா!

"மஹாபாவி! என் செய்வது! எனக்கு இனி வாழ்வென்ன? என்னை நம்பி சகலத்தையும் துறந்த ஒருத்தியை விட்டுவந்தேனே. என்ன கதிதான் அடைவது?"

"மஹாராஜ்! துக்கம்வேண்டாம். துக்கித்துப் பயனென்ன?"

"தம்ஞஜி! உன்வார்த்தையைக் கேட்டுக் கெட்டேன்."

"மஹாராஜ்! தாங்கள் இருந்தும் பயனில்லை."

"ஏன்?"

"காப்பதற்கு மூன்றா?"

"அப்படி உயிர் துறப்பதும் கௌரவமன்றோ?"

"இல்லை"

"தம்ஞஜீ!"

"விசனிக்கவேண்டாம். நமக்குஇன்னும் முக்கியமான காரியங்கள் இருக்கின்றன."

"தம்ஞஜீ! என்னைக்கொன்றுவிடு. நான் பாதகன்."

"மஹாராஜ்! உங்களை நம்பியவர் வெகுபெயர்கள்."

"என்ன? ரௌஸிஞரா! ரௌஸிஞரா!!"

"மஹாராஜ்! நான் கூடத்தங்களுக்குச் சொல்லவேண்டியதில்லை. வியாசபகவான் போதித்திருக்கின்றாரென்று தாங்களே சொல்லியிருக்கின்றீர்களே."

"என்ன?"

"ஒரு குடும்பம் முன்னுக்குவருவதற்காக ஒருவனையும் ஒரு கிராமத்திற்காக ஒரு குடும்பத்தையும், ஒரு நாட்டுக்காக ஒரு கிராமத்தையும் கொடுத்துவிடலாமென்று சொல்லியிருக்கின்றதல்லவா?"

"ஆமாம்."

"நான்மேலே சொல்லுவானேன்?"

"ரௌஸிஞரா என்ன பிழை செய்தாள்?"

"ஒன்றுமில்லை."

"பின்னை?"

"மஹாராஷ்ட்ரம் பிழைப்பதற்கு ரௌஸிஞராவைக் கொடுத்தோம், அல்லவா?"

தம்ஞஜி! எனக்கு ஒன்றும் தெரியவில்லை...........
ரௌஸிஞரா! உன்னையேன் கூப்பிடுகிறேன்.

"அந்தோ! நாமிருவரும் அப்பெரும் ஆலமரத்தின் நிழலில் பனிக்குபோன்ற நீரையுடைய ஏரிக்கரையில் படுத்த பொழுது சுற்றிலுமிருந்த பூச்செடிகள் வாசனைவீசினவே! நடுவெயிலிற்கூட உனக்கன்றோ அவை சற்றும் வாடாம

விருந்தன? உன்னோடுகூடநான் அப்பொழுது இருந்ததைப் போன்ற சுகம் நான் ஒரு பொழுதும் அநுபவித்ததேயில்லை நீ விளையாட்டாக வெழுந்து சற்று உலாத்தினை. வரும்பொழுது உன்மடி நிரையப் பூக்கொய்துவந்தாயல்லவா? இப்பொழுதுதான் ஞாபகத்துக்கு வருகின்றது. நானும் ஒரு மாலை தொடுத்து அதையுனக்குப்போட, ரதிபோன்றும் விளங்கினையே! மன்மதன் உலகத்தையெல்லாம் வென்று ஜெயபேரியடிப்பதுபோன்ற சிலம்பொலியுடனும், மன்மதனது துவஜம்போன்ற வெகு அழகாய் வீசி யொடிவதுபோன்ற நடையுடனும் நடந்துவந்தாயல்லவா? நான் இவற்றையெல்லாம் யெப்படி மறப்பேன். நான் பிரம்மஹத்தி தோஷத்திற்கு ஆளாவேனோ? நீ அப்பாதகர்கள்கையில் அகப்பட்டுப்பிழைப்பாயோ? உன் தகப்பனும் மஹா பாதகன். அண்ணன், தம்பி, தகப்பன்முதலியோரைக் கொன்றும் சிறையிலடைத்தும் ராஜ்ஜியமாண்டவனன்று? இவளையுமன்றோ கொன்றுவிடுவான், பாவி! கூடமரித்தலாகாதா! தம்ஞாஜி! புறப்படு, நாம் அவர்கள் கையில் அகப்பட்டுக் கொள்ளுவோம்.''

"மஹாராஜ்!"

"மறுபேச்சுப் பேசாதே."

"மஹாராஜ்! தெய்வமில்லை? தெய்வத்திற்காகவோ. ஒரு பெண்பிள்ளைக்கோ நீங்கள் உலகத்தில்வாழ்ந்திருப்பது?"

"தம்ஞாஜீ! நீ கொடியவன்......அவள் பார்வையே காந்தியை வீசிற்று. உலகத்தில் ஆபரணங்கள் பெண்பிள்ளைகளுக்கு அழகைக் கொடுப்பதுண்டு. அவளே ஆபரணங்களுக்கு அழகைக் கொடுத்தாளன்றோ? அவள் உருவம் அழ

ின் கோயிலா? அல்லது அவள்தான் தெய்வமோ? தம்ஞாஜி! பிழைத்தேன்."

"மஹாராஜ்! விசனியாதேயுங்கள்."

"ரௌஷனாரா!"

"அவளைப்பற்றி நினைக்கவேண்டாம்."

"பாவியன்றோ இப்படிப்பேசுவான்."

தம்ஞாஜி கண்ணினின்றும் நீர் பெருகிற்று.

"ஐயா! நமது குருவின் சொல்லை—"

"என்ன சொல்?"

"மஹாராஷ்ட்ர தர்மம்."

"ஆமாம்! தம்ஞாஜி!"

"மஹாராஷ்டரம்! நமது தெய்வம்!"

"இல்லாவிடில் நான் அவர்களோடு சண்டையிட்டிருப்பேன்."

"குருவின் சொல்லை எப்படித்தட்டலாம்?"

"ஆகாது தான்."

"பின்னென்ன?"

"ஒன்றுமில்லை."

"விசனம் வேண்டாம்."

"ரௌஷனாரா! எங்கேயிருக்கிறாய்? நான் பொய்யனா, சத்திய சந்தனாவென்பதை யறிந்துகொள்ளுவதன் முன்னர் எங்கேயோ பறந்துபோய்விட்டாயே. தயைபற்றவளே! என் துக்கத்தைக் கண்ணுறேன். நீ என்மேல் நிரம்ப ஆசைவைத்தேனென்றாயே. என்னை இப்பொழுது பார்! அளவற்ற ஆனந்தத்தை எனக்குவிளைவித்த நீ இப்பொழுது என்னைப் பேதையாய் விட்டுப்போனாய். அந்தோ! இவ்வளவு

அன்னையை வேறு எங்கே காண்பேன்? எல்லாம் பொய்யோ. நான் பித்தம் பிடித்தவனாயிருக்கின்றேனே. நானன்றோ அவனை விட்டு ஓடிவந்தேன்!"

"இந்நிலை வெகு பரிதாபமாயிருக்கின்றது. ஏனெனில், மனவுறுதி யென்னமோ கிடையாது; பிராணிகளைப்போன்று, "கிடைக்கவில்லை; விட்டுவிடுவோம்" என்று மிருகங்களைப்போல இருந்து விடவும் முடியவில்லை. சுழலைப்போன்று மன்றோ விதி நம்மைச் சுழற்றிச் சுழற்றித் திரும்பவும் பள்ளத்தில் அழுத்துகின்றது." என்று தம்ஞாஜி தனக்குத்தானே சொல்லிக்கொண்டான்.

"நான் தயையற்றவன்; போக்கிரி; இல்லாவிடில் என்னை நம்பியவனை விட்டு வருவேனோ. இருந்தாலும், என் மனம் துன்பத்திலுழலுகின்றது. இருதயமே! நீ துன்பமென்கிற நோயால் பிடிக்கப்பட்டு துளைக்கப்படுகிறாய். நீ ஏன் வெடித்துப்போகவில்லை? மனோவியாதியான பேராற்றில் கதியற்று அழுந்திக்கிடக்கும் இப்பிண்டம் உயிரை யிழப்பதில்லை; என்குடல் காலாக்னியால் எரிக்கப்பட்டும், அழியமாட்டேனென்கின்றது. என்னைத் துண்டுதுண்டாகத் துண்டித்துக் கொண்டிருக்கும் விதியோ, என்னை பின்னும் வருத்துவதற்காக உயிரைக் கொண்டுபோகமாட்டேனென்கின்றது.—"

"தெய்வமே! பேதைமானைப் புலியிடமாக பிடித்துக் கொடுப்பாய்! இப்படியும் நடக்குமா? இனியார் காப்பாற்றுவார்கள்? உயிருமுண்டோ? பாவம்! பாவம்!!"

"மஹாராஜ்! நமது தலைவிதியைப்போன்று மிருக்கின்றது நமது தலைமேற் காயும் வெயில். உங்கள் மனமும் தேகமும் வருந்திக்கிடக்கும் இப்பொழுது இம்மாதிரியாகத் தூக்கித் தூக்கொண்டு அன்னாகாராதிகளில்லாமல் வெளியிற் கிடப்

பது சரியன்று. ஆதலின் சமீபத்தில் தண்ணீரிருக்குமோரிடத்திற்குப்போய் கொஞ்சம் களைப்பாற்றுக் கொள்ளுவோம்."

சிவாஜி மௌனமாய்க் கூடவா போகிறான்.

"இதோ ஓர் ஓடைதெரிகின்றது மஹாராஜ்! அப்பா! என்ன குளிர்மை! எவ்வளவு ரமணீயமானவாஸனை! தாமரையெல்லாம் விழித்து விழித்துப் பார்க்கின்றன. இவையெல்லாம் உங்கள் கவலையை போக்கிவிடும் "என்று சொல்லிக்கொண்டே சிவாஜியும் தம்ணாஜியும் ஓடைக்கரையிலுட்கார "அவர் மனத்திலிருக்கும் எண்ணத்தையெல்லாம் மாற்றிவிடுவேன்" என்று தம்ணாஜி தனக்குத்தானே சொல்லிக்கொண்டான். பின்னும், மஹாராஜ்! சற்றுப்பொழுதிற்குக் கண்ணினின்றும் நீர் விடாதிருங்கள். எனது வார்த்தையைக் கேட்டுவிட்டு உங்கள் இஷ்டப்படி செய்யலாம். இவ்வோடையின் அழகும், ஓடையில் மெல்லியதான தாமரைக்கொடி மெல்ல அசைவதும் அன்னமானது ரமணீயமாகப் பாடிக்கொண்டு ஒரு தாமரையிலிருந்து மற்றொன்றிற்குத் தாவுவதும்.— இவையெல்லாம் நமக்கினி நன்மை வருமென்பதைக் காட்டவில்லையா? தங்கள் பாரியை இருவரிருக்கிறார்கள். ஓர் அருக்கச்சி விஷயமாய் இவ்வளவு தொந்தரவு படுவது எவ்வுலகிலாவது அடுக்குமா? மஹாராஜ்! தாங்களுமென்ன யோசியாதிருக்கிறீர்கள்? தங்களுக்கும் சொல்லவேண்டுமா?"

"தம்ணாஜீ! என்னை நீ அறியவில்லை?"

"மஹாராஜ்! சித்தம்."

"எனக்கு பாரியை யொருவரும் வேண்டியதில்லை."

"சித்தம்."

"என்னையவள் நம்பினள்."

"ஆமாம்."

"அவளால்தான் நான் உயிரடைந்தேன்."

"ஆமாம்."

"அவளால்தான் மஹாராஷ்ட்ரம்."

"ஆமாம்."

"ஆதலின்———"

"அவளைக்குறித்து நாம் விசனிக்க வேண்டியதுதானோ?"

"ஆமாம்."

"மஹாராஜ்! தெய்வத்தின் செயல்."

"தெய்வம்தான் கொடுமையாயிருந்ததே யென்று விசனிக்கிறேன்."

"தெய்வமாக ஒன்றும் செய்யவில்லை. அவரவர்கள் கர்மத்தின் பலனை அவரவர்கள் தவறாது அநுபவிக்கும்படி செய்வதன்றோ தெய்வம்?"

"தம்முஜீ! இதுவென்ன?"

"தத்துவம்.!"

"என்ன?"

"மஹாராஷ்ட்ரம் நசிக்கக் கூடாதென்று பகவான் நினைத்து, அதன் பிராணனாகிய தங்களை எமனாகிய அவுரங்கசீபினிடமிருந்து ரௌஷினாராவென்று பிணைப்போட்டு விடுவித்தார்."

"ரௌஷினாராதானோ அகப்பட்டுக் கொள்ளவேண்டும்."

"பகவான் சித்தம்."

"இம்."

"மஹாராஜ்! புராணங்களிலேயே அநேக விஷயங்களுக்கு நாம் காரணம் சொல்லமுடியாமலிருக்கின்றது. அவற்றிற்கெல்லாம் நாம் பகவானைக் கோபிப்பது சரியன்று. எல்லாம் அவரவர் கருமத்தின் பலன். இது ரௌஷினாரா கர்மம்."

"தம்முஜி! சற்றுத் தூங்குகிறேன்."

"சித்தம்! மஹாராஜ்!"

"தம்முஜி! ஜாக்கிரதை."

சிவாஜி படுத்துறங்கிவிட்டான்.

## அத்தியாயம் II

---

"ரௌஷினாரா!"

"அப்பா!" என்று தலையைக் கீழேகுனிந்துகொண்டாள்.

"என்ன துர்புத்தி?"

"அப்பா! என்னைக் கொன்று விடுவதானாற் கொன்று விடுங்கள். நான் தங்கள் விஷயத்திற் பிசகு செய்தேன். நான் உயிர்வைத்திருப்பதற்கு அர்ஹதையுடையவளன்று."

"என்ன துர்புத்தி? உன்பிதாவின் விரோதியோடு ஓடினாயே! உன் நெஞ்சழுத்தம் எவ்வளவு?"

"அப்பா! என்னைக் கேட்கவேண்டாம்"

"ஏன்?"

"நான் செய்தது பிழைதான்."

"இப்பொழுதுதான் அறிந்தாயோ?"

"இல்லை."

"மன்னமே தெரியமோ?"

"என்ன துணிவு?"

"இதுவும் துணிவா?"

"ரௌஸினாரா! இதுவரையில் என்னெதிரே நின்றுபேசி னதில்லையே! இப்பொழுது நீ எப்படித்துணிந்தாய்!"

"இதுவரையில், பேசவேண்டிய அவசியமில்லை."

"இப்பொழுது?"

"நீங்கள் தாமே கூப்பிட்டீர்கள்?"

"ஆமாம்."

"நான் சொல்லவேண்டியனவற்றைச்சொன்னேன்."

"அப்புறம்?"

"ஒன்றுமில்லை."

"இனி யென்னசெய்வாய்?"

"காலத்தைக் கழிப்பேன்?"

"எப்படி?"

"மறந்தேன்; உயிர் வைத்தால் காலத்தை ஏதேனும் வாசித்துக்கழிப்பேன். இல்லாவிடிற் பரமோத்தமம்."

"ரௌஸினாரா! நீசெய்தது பிழையன்று!" என்றான் பரிதாபமானகுரலுடன் அவுரங்கசீப். முதலில் கோபத்தில் நினைத்தபடியெல்லாம் கோபித்துவிட்டு, பிறகு அவள் நொ ஞ்சு மேனும் அசையாதிருந்த நிலையைப்பார்த்து, கல்நெஞ் சையுடையனாயிருந்தும் தன்வயிற்றிற் பிறந்தபெண்ணாயிரு ந்தபடியால் சற்று இரங்கினான். சில பத்து வருஷங்களுக் குமுன் ரௌஸினாரா இவ்விதம்செய்திருப்பாளேயாகில் உட னேதுண்டித்துவிட உத்திரவுகொடுத்திருப்பான். ஆனால்,வய தாயினகாரணத்தால் முன்னைவிட அக்கொடியனுக்கும் த யையுண்டாயிற்று.

"ரௌஷனாரா!" என்று பின்னும் அழைத்து."நீ இரத்த சம்பந்தம் உடையவளன்றோ? "என்றான் மெல்ல.

"ஆமாம்."

"உட்காரு."

ரௌஷரா உட்கார்ந்தாள்.

"அப்படியிருக்க நீ ஓடினாயே. சிவாஜி யார்தெரியுமா?"

"தங்கள் விரோதி."

"தெரிந்துமா செய்தாய்?"

"ஆமாம்."

"உன் மனம் சரியாயில்லை. சற்றும் மனமிரங்காமற் பேசுகிறாய்."

"இல்லை. அப்பா!"

"பின்னை, தெரிந்தும் அவன் பின் ஏன்சென்றாய்?"

"எனக்கொன்றும் தெரியவில்லை."

"இல்லை."

"பின்னே?"

"காரியமாய்த்தான்."

"என்ன காரியம்?"

"நான் தங்களுக்கும் சிவாஜிக்கும் சிநேகம் செய்துவைக்க வேண்டுமென்று நினைத்தேன்."

"ஹா! ஹா!! ஹா!!!"

"ஏன்?"

"நானே அதைப் பண்ணிக் கொண்டிருப்பேனே."

"பின்னே அவனிடத்தில் என்ன பயம்?"

"என்னவா?"

"சொல்லுங்கள்"

"உனக்குச் சொல்லித் தெரியுமா?"

"ஏன் தெரியாது?"

"அவன் நமக்குக் கீழ்ப்படிந்திருப்பானா?"

"ஏன் கீழ்ப்படிய வேண்டும்?"

"ஏனா?"

"ஐயா! இதெல்லாம் தானே ஏகசக்ராதிபத்யம் பண்ண வேண்டுமென்னு மாசையால் வருவது. நான் சிவாஜியைக் கண்டு ஆசை கொண்டது அதை விடத் தப்பிதமா?"

"ரௌஷினாரா! உனக்குத் தெரியாது."

"அப்பா! எப்பொழுதும் எவ்வரசரும் தத்தம் எல்லைக்குள்ளிருக்கும் வரைக்கும் சுகித்திருக்கிறார்கள். மேலும் மேலும் வேண்டுமென்று ஊரூராகப் பிடித்து சகல லோகத்தையும் தன்னாட்சிக்குள் கொண்டு வர வேண்டுமென்று ஆசை கொண்டவர்கள் இது வரைக்குமே உருப்பட்டதில்லை."

"எனக்கு போதிக்க வருகிறாயே."

"இல்லை."

"பின்னே என்ன செய்கிறாய்?"

"பெரியோர்கள் சொல்லியதை."

"என்ன?"

"நான் மேலே சொல்லியது தான்."

"பெரியோர்கள் பிறமதத்தானுடன் கூட உத்தரவு கொடுத்தார்களா?"

"ஏன் கொடுக்கவில்லை?"

"நான் உன்னை மன்னித்தேன்."

"வந்தனம் மஹாராஜ்!"

"ஆனால் நீ பிடித்த முயலுக்கு மூன்றே கால் என்கி ன்றாயே.'

"இல்லை."

"இல்லாவிடில், இப்படிச் சொல்லுவாயோ?"

"மதம் வேறு என்பதெல்லாம் ஓர் ஐதிகம் தானே."

"ஐதிகமா?"

"ஆமாம்."

"நீ புதிது புதிதாய் படித்திருக்கிறாய்."

"ஒன்றும் புதிதில்லை. ஒன்றும் பகவானல்லாதவர்க ளாற் செய்யப்பட வில்லையே? அப்பா!"

"இருக்கட்டும்."

"ஆதலின் எல்லா மதங்களு மொப்புக்கொள்ளக் கூடிய வை தாமே."

"அது எப்படி?"

"அது எப்படியா?"

"ரௌஸினூரா! உன்னோடு பேச முடியாது."

"அப்பா! உங்களுக்கு கோபமே முன்னே நிற்கின் றது."

"இல்லை உன்னை இப்பொழுது மன்னித்து விட்டேன்."

"வந்தனம்."

"உடனே அவுரங்கசீப் ரௌஸினூராவைத் தனியே விட்டு விட்டுப் போய்விட்டான்.

"போதும்! போதும்! பித்தம் பிடித்த மனமே! இன் னமும் ஏன் நீ வீணாக வருந்துகிறாய்? உனக்குக் கிடைக்கக் கூடாத வஸ்துவின் மேல் ஆசை வைத்தால் உனக்கு அது கிடையாததுடன் கூட மனோ வியாதியும் அதனுடன் சேர் ந்தவையும் வருமெனத் தெரிந்திருக்க, நீ என் மறுபடியும்

சிவாஜியின் உருவைப் பார்க்க வேண்டுமென்றாசைப் பட்டீ ருய்! ஒரு தடவை பார்த்ததன் முடிவைத் தான் அறிந்து கொண்டாயே! இன்னமும் வேண்டுமோ? அந்தோ! நான் ஏன் உன் மேல் குற்றஞ் சாட்டுகிறேன். மன்மதன் பாண ங்களன்றோ என் இருதயத்தைப் பிளக்கின்றன. புஷ்ப பாணத்தை யுடையோனே தேவாசுரர்களையும் உலகத்தில் அரசன் முதல் இழிந்த வேலைக்காரன் வரையிலுள்ள எல் லோரையும் வென்ற மஹாவீரா! என்மேல் இனி என்னு யுள் முடியும் வரைக்கும் தயை வைத்தலாகாதோ! நீ தயை வையாவிடில் நான் எமனுக்கு இரையாக வேண்டி யது தவிர வேறு வழி யொன்றுமே யில்லை. உனக்கு புத் தியில்லையோ? உருவமில்லையென்று சொல்லி நான் கேட்ட துண்டு. அறிவுமில்லை யென்பதை யிப்பொழுது தானறிந் துகொண்டேன். உலகத்தில் எத்தனையோ செல்வந்தர்கள் அரசர்கள் வீரர்கள் முதலாயினோரிருக்க சற்றும் வலியற்ற என்னுடன் நீ போர்புரிய வந்தாயே! உனக்கு இது வீர த்தனமோ?............இங்கே ஒருவருமில்லையே? என்று சொல்லித் தன் கண்ணினின்றும் வந்த நீரைத் துடைத்துக் கொண்டாள். "இங்கு ஒருவருமில்லையே. அப்பா இங்கு வந்தார். தலைக்கு வந்தது தலைப்பாகையுடன் போயிற்று. அவர் என்னை உயிருடன் விடுவாரென்று சற்றேனும் நினை க்கவே யில்லை. என்னவோ பகவானது தயை......இதோ பாதி யெழுதி வைத்திருக்கும் என்னன்பன் உருவப் பட த்தை முடித்து விடுகிறேன். என் இருதயம் துடிக்கின் றது. என் கை நடுங்குகின்றது; ஆனாலும் இப்பொழுது போன்ற சமயம் எனக்கு அகப்படுவது அரிது. நாளைக்கு என்ன என் பிதா நினைக்கின்றாரோ? சாவு என்றைக்கு வரு

மோ? என் அன்பன் படத்தையாவது பார்த்துப் பார்த்துக் களித்து உயிரைத் துறப்பேன். ஆகலின் இதோ முடித்துவிடுகிறேன்" என்று படம் எழுத உட்கார்ந்து கொண்டான்.

## அத்தியாயம் 12.

### ஊர் போய்ச் சேர்ந்தான்.

"தம்ஜுஜி! நீ நிரம்பப் புத்திசாலி."

"ஏன்? மஹாராஜ்!"

"நமது வேஷம் யாவரானும் கண்டு பிடிக்க முடியாது."

"ஆமாம்."

"இல்லாவிடில் —"

"கண்டிப்பாய் அகப்பட்டுக் கொண்டிருப்போம்."

"தடையென்ன!"

"நாம் அஜ்மீர் காட்டில் தானே முதலில் அகப்பட்டுக் கொண்டோம்?"

"ஆமாம்."

"அங்கே தான் நான் ஒரு கோசாயியைப்பார்த்தேன்"

"அங்கே!"

"நாம் தங்கிய விடத்தில்."

"ரௌஷனாராவோடு கூடவா?"

"இல்லை."

"ரௌஷனாரா! எனக்காக நீ என்ன பாடு படுகின்றாயோ?"

"மஹாராஜ்!"

"என்ன தம்ஞாஜி!"

"அந்நினைப்பு வேண்டாமென்று கேட்டுக் கொண்டே னே."

"தம்ஞாஜி! மேலே."

"மறந்தேன். அவனைப்பார்த்ததும் நாம் வேஷம் மாற்றிக்கொண்டோம்."

"ஆமாம்."

"அநேக விடங்களில் கோயிற்களிற் கூட துருக்கரு லேற்பட்டு கொலையாளிகளிருந்தார்கள். கவனித்தீர்களா?"

"கவனித்தேன்."

"நாம் எல்லோரையும் ஏய்த்து விட்டோம்."

"ஆமாம்."

"நமது ஊருக்கும் வந்து விட்டோம்."

"இன்னும் எத்தனை மைல் இருக்கின்றது ராஜகிரி."

"இருபது மைல் இருக்கலாம்."

"சரி."

"வேஷம் கலைத்து விடுவோமோ?"

"வேண்டாம்."

"நாம் எப்பொழுது வந்தோம் போனோமென்பதே ஒருவருக்கும் தெரியக்கூடாது."

"இன்று சாயங்காலம் ஊர்போய்ச் சேர்ந்துவிடுவோம் இருட்டிய பிறகு நாம் அரண்மனைபோய்ச் சேருவோம்.

---

# அத்தியாயம். 13.

## மனக்கலக்கம்.

"உலகமே! நான்போய்வருகிறேன். இனியெனக்கு இவ்வுலகிலென்ன விருக்கின்றது? எனது அன்பனைப்பிடித்து விட்டார்களாம். இன்றைக்கு எனது பிதா அவரை அங்கேயே சிரச்சேதம்பண்ணிவிடும்படி உத்திரவு கொடுத்து விட்டார். தெய்வமே! இனியெனக்கென்ன இவ்வுலகிலிருக்கின்றது? நான் அவர்பிழைத்திருக்கிறாரென்று வெண்ணத்திலாவது சுகித்திருக்கலாமென்று நினைத்தேன். நான் என்ன பாவம் செய்திருக்கிறேனோ! என் அன்பே! நான் உன்னை உடனே காணலாமோ? என்னுடைய அங்கங்களெல்லாம் மயிர்க்கூச்சலெடுத்துப் பறைக்கின்றது. எனதங்கம் பனிக்கட்டிபோன்றுமன்றோ குளிர்ந்துவிட்டது." என்று ரௌஷினாரா தனக்குத்தானே பேசிக்கொண்டிருக்கும் தருணத்தில் சமீபத்தில் ஏதோ ஒரு சப்தம் கேட்டது.

"யார் அங்கே?"

"அம்மா! நான்தான்."

"புறப்பட்டுப்போ; இப்பொழுது இங்கு ஒருவரையும் வரவிடாதே"

"சித்தம்! அம்மா!" என்று சொல்லிவிட்டு வேலைக்காரி போய்விட்டாள்.

உடனே மேஜையின் மேலே வைத்திருந்த ஒரு சிறிய தங்கப்பாத்திரத்தைக் கையிலே யெடுத்துக்கொண்டு,

"நான் செய்யும் கடோரமான செய்கையை ஒருவரும் அறியக்கூடாது. விஷமே! இங்குவா! நீதான் எனக்கு விலையற்றமாணிக்கம். ஆ! நீ என்ன என்ன சுகங்களைத் தருகின்றாய்? உலகத்தில் அளவிடக்கூடாத சுகம் எதுவாகும்? எவ்வளவு உருசியான பக்ஷியங்களைக்கொடுத்தாலும், அதில் கொஞ்சம்தான் சாப்பிட முடியும். கொஞ்சம் அதிகமாகச் சாப்பிட்டுவிட்டாலோ அதனால் எவ்வளவோ துன்பங்கள் உண்டாகின்றன. ஆணும் பெண்ணும்கூடி ஒருவர் மனத்துக்கின்னொருவர் இசைந்திருந்து ஆயுள்முழுதும் கூடியிருப்பதரிது; ஏனெனில் மனிதரென்று பிறந்தால் கொஞ்சமேனும் சண்டைசச்சரவில்லாம லிருக்கமுடியாது. ஆயினும் அப்படியே யிருவரிருப்பதாக வைத்துக்கொள்வோம்; என்றைக்காவது ஒருபொழுது யாரேனும் ஒருவரை யமன் வந்து கொண்டுபோய்விட்டால், அப்பொழுதுபாக்கி நிற்கும் இன்னொருவர் படும் கஷ்டத்தை யெடுத்துரைக்க முடியாது. ஆயுள் முழுதும் எதையேனு மொன்றைப்பார்த்துக் களித்துக்கொண்டிருப்பதும் அசாத்தியமானகாரியம். சங்கீதம் ஒருநாளும் அதிகமாகப்போயிற்றென்பதில்லை; அதுவும் எவ்வளவு நாட்களுக்குத்தாங்கும்? அதுவும் சில சில சமயங்களில் அதிகமாகப் போய்விடுவதுண்டு. நன்றாக யோசித்துப் பார்த்தால், அதில் பிரியப்பட்டவர்களுக்குமரணத்தைப்போன்ற எல்லையில்லாச் சுகத்தைக்கொடுப்பதொன்றுமேயில்லை. மரணமே! நான் உன்னை வரித்தேன். நான் முன்னேவரித்த சிவாஜியை நீ கொண்டுபோய்விட்டாய்! நீ என்னையும் கொண்டுபோ! என்னை என்னன்பனுடன்சேர்த்துவிடு. இவ்விஷம் என்னைக்கொல்லாதிருந்துவிட்டால்! டிலேர்கானுக்கு என்னைக் கல்யாணம் செய்துகொடுத்துவிடுவதாக என்னுடைய

தகப்பனார் சொல்லிவிட்டாராம். என்னை சம்மதமில்லாமலே அக்கல்யாணம் நடக்கப்போவதாக அரண்மனையில் வதந்தி இவ்விஷம் என்னைக்கொல்லாவிட்டால், எனக்கு கல்யாணம் நடந்துவிடுமோ? என் வேலைக்காரி நான் ஒருவேளை விஷம் சாப்பிட்டுவிடப்போகிறேனென்பதை நினைந்து எதையோ விஷமென்று என்னிடம் கொண்டுவந்து கொடுத்துவிட்டாளோ? நான் மருந்துக்குவேண்டுமென்று சொன்னேன். அவள் நம்பினாளோ நம்பவில்லையோ? அவளைக்கூப்பிட்டுக் கேட்கலாமா? வேண்டாம். அவள் ஏன் சந்தேகிக்க மாட்டாள்? இவ்விஷம் என்னைக்கொன்றுவிடாமல் தேகத்தில் மாத்திரம் தொந்திரவை யுண்டுபண்ணி என்னை உலகத்தோர் நகைப்புக்கு ஏதுவாக்கிவிடுமோ! நான் பிழைத்திருப்பதேகூடாது. டிலேர்கானையா மணந்துகொள்ளுவது? சீ! சீ! இதோ சிவாஜியின் பிசாசை நான் பார்க்கிறேன். சிவாஜி மரித்துவிட்டார். கண்ணே! கண்ணே! நீ எதிரே நிற்கின்றாயே! நான் உயிரோடிருக்கும் வரையில் நீ என்னுடன் பேசமாட்டாயோ? ஆனால் இதோவந்துவிட்டேன்" என்று சொல்லி, விஷம்வைத்திருந்த பாத்திரத்தைத்தனது வாயண்டை கொண்டுபோனாள்.

இச்சமயத்தில், ரௌஷினாராவின் சகோதரனாகிய மாஸூம்ஸூல்தான் தனது சகோதரியைப்பார்க்கவந்திருந்தான் அவன் அந்கு வந்தபொழுது வாசலிலிருந்த வேலைக்காரிஉள்ளே ஒருவரும்போகக்கூடாதென்பது அம்மாள் உத்திரவென்று சொன்னாள். "இல்லை; நான் இப்பொழுதுபோய்ப்பார்க்கவேண்டும்."

"கூடாது."

"நீ யார் சொல்லுவது?" என்று அவனைப்பிடித்துத் தள்ளிவிட்டு உள்ளே வந்தான்.

அப்பொழுது "அம்மா! அம்மா!" வென உரத்திக்கத்தினான்.

அக்கத்தலைக்கேட்டு நடுநடுங்கி விஷப்பாத்திரத்தைத் திடீரெனக்கீழே போட்டுவிட்டு உட்கார்ந்திருந்தாள்.

மலுஜும் ஸாவல்தான் மிகவும் பாதகனைப்போக்கிலி. அவனுக்கு பிறந்ததுமுதல் சத்தியமென்பதாவது நன்னடக்கையென்பதாவது அன்பென்பதாவது தெரியாது அவனுடைய தோழர்பலர். அவர் எக்குணத்தை யுடையரா யிருப்பாரென்பதைப்பற்றி இங்கு விவரிக்கவேண்டிய அவசியமில்லை அவனுடைய துர்நடத்தையாலுண்டாகும் செலவுகளுக்கு தகுந்தபடி கொடுப்பவர் எவருமேயில்லை. அவன் தகப்பனுடைய அவுராங்கசீப், பணத்தை இறுக்கிப்பிடித்தவன். ஆதலின் இவனுக்கு வேறிடங்களில் எப்படியாவது பணம் பறிக்கவேண்டியிருந்தது. கடன்காரர்கள் வீட்டில் வந்து தொந்திரவுபடுத்தவே, இன்றைப்பொழுது தனது சகோதரியிடம் கழித்துப்போகலாமென்ற வெண்ணங்கொண்டு இங்கே வந்தான்.

"மஜும்! வா!"

"ரோஷனாரா!"

"எப்பொழுது வந்தாய்!"

"இப்பொழுது தான்"

"உட்காரு!"

"உட்கார்ந்தேன்" என உட்கார்ந்துகொண்டே, 'ரோஷனாரா! நீ ரொம்ப மனக்கவலைபடுகின்றதுபோலிருக்கிறது."

"என்ன கவலை?"

"என்னிடம் சொன்னாலென்ன?"

"எனக்கு ஒன்றும் இல்லை."

"ரௌஸினா! அப்பா நிரம்பக் கோபித்துக் கொண்டார்."

"ஏன்?"

"உன்னிடம் சொல்லவில்லை?"

"சொல்லியாய் விட்டதே. இனிமேல் கோபிப்பா னேனென்று நான் கேட்டேன்."

"ரௌஸினா! எனக்கு வெகு கஷ்டமாயிருக்கிறது."

"ஏன்?"

"அதை யேன் கேட்கிறாய்?"

"சொல்லு கேட்போம்."

"இரவும் பகலும் தூக்கமேயில்லை."

"ஏன்?"

"கையிலோ ஒரு செப்புக் காசு கூட கிடையாது."

"ஏன் அப்படி?;'

"அப்பா என்னை வேலையிலிருந்து நீக்கி விட்டார். அவர் கொடுக்கும் பணம் என் செலவுகளுக்குப் போதாமல் கடன்வாங்கும்படி அவசியமாய் நேரிட்டது."

"இப்பொழுது கடன் காரர்கள் கேட்கின்றார்களோ?'

"ஆமாம்."

"என்ன செய்யவேண்டும்?"

"நான் என்ன செய்வது?"

"அப்பாவுக்குத் தெரியுமோ"

"தெரியும்."

"என்ன செய்தார்?"

"சும்மா விருக்கின்றார்."

"உன்னையவர்கள் வதைக்கிறதை யறிந்துமா?"

"ஆமாம்."

"சரி இனி யென்ன செய்யப் போகிறாய்?"

"உன்னிடத்தில் வந்து அழுவந்தேன்;"

"என்னாலென்ன முடியும்."

"ரௌஸினாரா?"

"மகும்! அவசரப்படாதே. என்னது என்ன என்ன விருக்கின்றதோ அவற்றை யெல்லாம் உன்னைக் கடன்காரர் கையினின்றும் விடுவிப் பதற்காகச் செலவழிப்பேன். ஆயினும் எல்லாம் சேர்ந்தும் நிரம்பக் கொஞ்சமாகத் தானே யிருக்கும்?"

"ரௌஸினாரா? உன்னைப்போன்ற சகோதரியைப் பெற்ற எனது பாக்கியமே பாக்கியம். அது கிடக்கட்டும், உன் முகத்தில் நிரம்பக் கவலை தோற்றுகிறது. ஏன் வருத தப் படுகிறாய். காரணத்தைச் சொல்லு?',

"மகும்! ஏன் கேட்கிறாய்?"

"ரௌஸினாரா! உன் இஷ்டப்படி செய்ய முடியாமற் போய் விட்டதென்று எனக்கும் வருத்தம் தான்."

"இனியென்ன?"

"ஏன்?"

"சிவாஜியைக் கொன்றுவிடவில்லை?"

"இல்லை."

"இன்று காலையெல்லாம் ஒரே புரளியா யிருந்ததே."

"அது பொய்."

"பொய்யா?" என்றாள் குதூகலத்துடன் எழுந்து

"ஆமாம்."

"பின்னை யெப்படிப் புரளி வந்தது?"

மரூம் பைத்தியக்காரத்தனமாய்ச் சொல்லி விட்டோமே யென நினைத்து விழித்தான். ஆயினும் இனி நிஜத்தை சொல்லாமலிருக்க முடியாதென்பதை யறிந்தான். உலகத்தில் சுகப்படுகிறவர்களுக்கு கஷ்டப்படுகிறவர்களைக் கண்டால் பரிதாபமாவது தயையாவது வருவது அரிது. கஷ்டப்பட்டவர்களாவது கஷ்டப் படுகிறவர்களாவது அவர்களைப் போன்றவர்களைக் காண்பார்களேயாகில் அவர்கள் இரம்ய அவர்கள் மேல் தயை கூர்வார்கள். மரூமையும் ரௌஷினூராவைப் போன்று அவுரங்கசீப் அநேக விஷயங்களில் தன்னிஷ்டப்படி நடந்து கொள்ள முடியாதபடி வைத்திருந்தான். ஆதலின மரூமுக்கு நிஜத்தைச் சொல்லி விடுவோமெனத் தோற்றிற்று.

"காரியமாய்த்தான்" என்றான் மரூம்.

"காரியமாகவா?"

"ஆமாம்."

"அறிந்தேன்."

"என்ன?"

"சிவாஜி இல்லையென்றால் நான் டிலேர் கானைக் கல்யாணஞ்செய்து கொண்டு விடுவேனென்று எண்ணியல்லவா?"

"ரௌஷினூரா நீ வெகு புத்திசாலி."

"மரூம் நான் இதற்கு எப்படி கைம்மாறு காட்டுவேன்."

"டிலேர்கான் பரம அயோக்கியன்."

"தெரியும்."

"எனக்குக் கல்யாணச் செய்தி கேட்டவுடன் ரொம்ப வருத்தமாயிருக்கது."

"என்ன செய்யலாம்?"

'என்?"

"மகும்! நீ தான் துணை. சகோதரனை விட வேறு உயர்ந்த துணை யெது. நீ யெப்படி என்னைக் காப்பாற்ற வேண்டுமோ அப்படி யென்னைக் காப்பாற்ற வேண்டும்."

"என்ன செய்யவேண்டும்? சொல்."

"நான் சொல்லவேண்டுமா? நீயே செப்பு."

"சுவாமிஜியிடம்போகவேண்டுமோ?"

"அண்ணு! கெட்டின்றுயே."

"எனக்கும் சுவாமிஜி ரொம்ப உதவிபண்ணுகிறேனென்று சொல்லியிருக்கிறார். அங்குபோனுல் எனக்கும் இலாபமாக வே யிருக்கும்."

"அவரோடு பேசினுயோ?

"பேசினேன்."

"அவரை யெக்த மூடனுவது வெறுப்பானு?"

"மாட்டவே மாட்டான்."

"நமது பிதா ஒரு பைத்தியம்."

"ஆமா—ம்."

"அவரும் கீழ்ப்படியவேண்டுமென்றுல் அது எப்படி முடியும்? இவரைவிட அவர் எத்தனையோ மடங்கு புத்தி சாலியன்றா?"

"தடையின்றி."

"கிடக்கட்டும்; எனக்கு நீ எப்பொழுது உயிரோடுப் பாய்?"

"எப்படி யென்று எனக்குத் தோற்றவில்லை."

"நீதான் சொன்னயே சற்று முன்னே."

"என்ன?"

"அங்கு கொண்டுபோய் என்னைச் சேர்ப்பிக்கவேண்டும்."

"எப்படிமுடியும்?"

"இல்லாவிடில்—"

"அறிந்தேன். எப்படிச்செய்வது?"

"அது உன்கவலை."

"அவர் என்னைத் தகஷிணத்துக்கு தனது பிரதிநிதியாக நியமித்தால், நான் உன்னை அங்கு அழைத்துப்போய்விடுவேன்."

"இல்லாவிடில்?"

"சிவாஜி நிரம்பப் பணம் கொடுப்பாரோ?"

"வேண்டியது கொடுக்கச் சொல்லுகிறேன்."

"சரி! எனக்கு அதுதான்வேண்டும்."

"மலையும்! என்னைக் காப்பாற்று!"

"இப்பொழுது எனக்கு ஏதாவது கொடுப்பாயோ?"

உடனே சில விலையுயர்ந்த நகைகளை மலையிடம் கொடுத்தனுப்பினன்.

## அத்தியாயம். 14.

### ஜெயம்.

சென்ற அத்தியாயத்தில் நடந்த சம்பாஷணை, சிவாஜி தப்பிப்போயிப் பத்தாவது மாதம் நடந்தது. அதற்குள் தக்ஷிணத்தில் நடந்த சில விசேஷங்களை யறிந்துகொள்ளுவோம்.

இந்தியா தேசத்தில் அவுரங்கசீப் காலத்தில் அநேகம் ராஜ்ஜியங்கள் இருந்தன. அவுரங்கசீப் மாத்திரம் எல்லோரையும் காட்டிலும் அதிகாரமும் செல்வமும் உடையவனாயிருந்தான். ஸிந்து நதிக்கரைமுதல் கங்கைநதிக்கரைவரையிலும், ஹிமாசலம்முதல் விந்தயபர்வதம் வரையிலுமுள்ள தேசங்களுக்கு அவன் அதிபதியாயிருந்தான். தெற்கே, ஆமதநகரம், பீஜபூர், கோல்கண்டாவென்ற மூன்றுவிடங்களும் மூன்று மகம்மதிய விராஜ்ஜியங்கள் செழித்தோங்கிக்கொண்டிருந்தன. இச்சமயத்தில மஹாராஷ்டிர விராஜ்ஜியமொன்று கிளம்பிக்கொண்டுவந்தது. அவுரங்கசீப் நன்றாகயோசித்திருப்பனேயாகில்,அவன் மஹாராஷ்டிரர்களை யடக்கும் நிமித்தம் பீஜபூர், கோல்கண்டா துருக்க வரசர்களுடன் சேர்ந்து அவர்களை பலப்படுத்தியிருப்பான். தானாகவே, அவர்கள் குறைந்த பலத்தையுடையவர்களாதலால், அவனுக்குள்ளடங்கிவிடுவார்கள். அவர்கள் ஒருவேளை அவனோடு போர்புரியவந்தாலும் அப்பொழுது வெகு இலகுவாக அவர்களை வெருட்டிவிடலாம். அவுரங்கசீப் நிரம்பப் பேராசைக்காரனானாலும், கொஞ்சமேனும் தயைமுதலிய நற்குணங்களல்லாதவனானாலும், தன்னைத்தவிர வேறு எவரும் அதிகாரத்திலிருக்கக்கூடாதென்ற வெண்ணங்கொண்டு அந்நாடுகளையெல்லாம் நாசத்துக்கொன்றுவிட வேண்டுமென்ற தீர்மானஞ் செய்துகொண்டான்.

இச்சமயத்தில் ஜெயசிங்கை பீஜபூருக்கு முற்றுகை போட அனுப்பியிருந்தான். ஜெயசிங்குசேனைக்கு வேண்டியபடி சாப்பாடு முதலியன கிடையாது. சமீபத்திலும் கிடைக்கக்கூடாதபடி எதிரிகள் செய்துவிட்டார்கள். அவன் போ

யிருந்த சமயத்திலும் அச்சமயத்திலும் அப்பிரதேசங்களில் மழையென்பதே கிடையாது. அவனுடையகளத்தில் வியாதி வரவரப்பரவிற்று. ஜெயசிங்கிருந்த ஸ்திதியைப் பார்த்து கோல்கண்டாவரசன் தன்னுடைய சேனையின் ஒரு பகுதியை பிஜபூர் உதவிசெய்யும்படி யனுப்பினான். இவ்வெல்லாம்தெரிந்தும் அவுரங்கசீப் ஜெயசிங்குக்கு கொஞ்சமேனும் உதவி பண்ணவேயில்லை. ஜெயசிங்குக்கு தன்மேல் அவுரங்கசீப் வைத்திருந்த வெறுப்பையும் அதன் காரணத்தையுமறிந்து தானும் தன்னுடைய ரஜபுத்திர வீரர்களும் மரித்தால் அவனுக்கு விசனமொன்றுமில்லையென்பதையுமறிந்து, உடனே அவுரங்கபாத்துக்கு தன் சேனையைத் திருப்பிக்கொண்டுவந்தான். அப்பொழுது ஜெயசிங்கு சிவாஜியினிடம் பிடித்திருந்த அநேகம்கோட்டைகளை அவனுக்குத் திருப்பிக் கொடுத்துவிடும்படி நேரிட்டது. சிவாஜியும் அவற்றை அப்போதைக்கப்போது பலப்படுத்திக்கொண்டான். மோரோபன்ட் என்னும் சிவாஜியின் சேனைபதி கல்யாண் என்னும் பிரதேசத்தை அவுரங்கசீபிடமிருந்து பிடுங்கிவிட்டான். ஜெயசிங்கு தன்னைவேண்டுமென்று கெடுக்க வெண்ணங்கொண்டு இக்காரியங்களெல்லாம் செய்கின்றானென்ன நினைத்து, வேறு ஒருவரையும் நம்பாமல், ஜெயசிங்கை வேலையிலிருந்து நீக்கி, மஸூம் ஸுல்தானை தக்ஷிணத்துக்குப் போகும்படி கட்டளையிட்டான். ஜெயசிங்கை உடனே டெல்லிக்கு வரும்படி உத்திரவுகொடுக்கவே, ஜெயசிங்கு டெல்லிக்குவர, வரும்வழியில் இறந்துபோய்விட்டான்.

* * * *

"ரெளவினுரா! நமது காரியம் ஜெயம்தான்."

"மகும்! என்ன?"

"உத்திரவாய் விட்டது."

"என்ன?"

"என்னை தகஷிணத்துக்குப் போகச் சொல்லி."

"தெய்வமன்றோ நமக்குத்துணை!"

"எனக்கு நிரம்பப்பொருள் வாங்கித்தரவேண்டும்."

"வேண்டியது. என்னை மாத்திரம் அவரிடம் கொண்டு போய் விடு."

"தடையென்ன?"

"எப்படிக் கொண்டுபோவாய்?"

"வெகு இலகு வாயிற்றே."

"எப்படி?"

"என்னுடைய ஹாரத்துடன் இருந்து விடு. ஒருவரும் சந்தேகிக்க மாட்டார்கள்."

"சரியான வழி அதுதான். மலே்ம்! இவ்வுதவிக்கு நான் என்ன பிரதியுபகாரம் செய்வேன்?"

"என்றைக்குப் புறப்படப் போகிறாய்?"

"இன்றைக்கே"

"சௌரியம்."

"தயாராயிருக்கின்றது."

"நான் அப்பாவிடம் விடை பெற்று வருகிறேன்."

"எனக்கு!"

"நான் இதோ ஆள்களை வரச்சொல்லுகிறேன்."

"சரி சீக்கிரம்."

"இதோ."

"மலே்ம். சீக்கிரம்.

"அப்படியே.

மலையும் புறப்பட்டுப் போய்விட்டான். சேனை டெல்லி யை விட்டுப் புறப்பட்டுப் போய் விட்டது.

டிலேர்கான் கல்யாணத்திற்காக தெற்கே யிருந்து வந்துகொண்டிருக்கிறான். அவுரங்கசீப் தன்னுடைய பெண்ணிடம் போய்ச் சொல்லுவோ மெனப் புறப்பட்டான். முதலில் யோசித்த பொழுது கல்யாணத்திற்குச் சற்றுப் பொழுது முன்னர்தான் செய்தியைச் சொல்வதெனத் தீர்மானித்தும், அவன் மகாபாதகனாயிருந்தும், நற்குணம் துர்குணம் என்னும் இரண்டு குணங்களால் ஒவ்வொருவரும் செய்யப் பட்டிருப்பதனால், அவுரங்கசீப் சற்று புத்திரவாஞ்சை யுடையவனாக மானி ரெளஷிஞராவையும் சற்று யோசித்து அக்காரியம் செய்வோமென யோசித்து அவனிடம் வந்து சேர்ந்தான். உள்ளே நுழைந்ததும் படுக்கை விரித்திருந்தது. மேஜையில் ஒரு மெழுகு வத்தி விளக்கும் திறந்து வைத்திருந்த டப்ஸிர் - ஏ - கபீர் புத்தகமும், கோரானும், ஏதோ பச்சை வர்ணத்தை யடைந்திருந்து கீழே கிடந்த தங்கப்பாத்திரமும் அவள் மலையுடன் பேசியபொழுது இருந்தபடியே யிருந்தன. சற்றுவது அவள் மறுபடியும் ஓடியிருப்பாளென்றெண்ணாமல், அவுரங்கசீப் அங்கே யிருக்கும் ஓர் நாற்காலியில் உட்கார்ந்து ரெளஷிஞராவைக் கூப்பிட்டான்.

"ரெளஷிஞரா!"

ஒன்றும் பதிலில்லை.

பின்னும் உரத்து "ரெளஷிஞரா!" என்றான்.

பதிலில்லை.

வேலைக்காரியைக் கூப்பிட்டான்.

அவளையும் காணோம்?

இது என்ன வேடிக்கை?

உடனே வெகு கோபத்துடன் வெளியே புறப்பட்டு வந்து இனி அவள் அகப்படுவாளே யாகில் அவளை உடனே துண்டித்து விடுவதென்றும் நிச்சயம் செய்து கொண்டு, முன் போல படைகளை அவளைப் பிடித்துக்கொண்டு வரும்படி யனுப்பினான், மஸமுக்கு செய்தி யனுப்புவித்து அவளை யெப்படியாவது பிடித்துக் கொண்டு வரும்படி கட்டளை யிட்டான், மஸமும் பிதாவின் எண்ணத்தை யெப்படி யாவது பூர்த்தி செய்வதாக ஒப்புக்கொண்டான்.

ஊரூராக ரௌஸினாரவைத் தேட படை சென்றன.

---

## அத்தியாயம் II

---

### ஆனந்தக் கோலம்.

---

கீழ்த்தேசத்தரசர்கள் பெரிய மாட மாளிகைகளும், மெல்லமளியும், நவரசம் கலந்த போஜனங்களும் அளவிறந்த பரிவாரங்களும் உடையவராய் எப்பொழுது அம்சதூளிகா மஞ்சத்திற் படுத்து இராஜ்ஜியம் எப்படிப் போனாலும், நாட்டில் வரையிலா அநீத நடப்பினும், ஊரை யெல்லாம் வேறெவனாவது வந்து கொள்ளையிடினும் கவனியாது படுத்துறங்கும் குணத்தையுடையவர்கள். அப்படி யல்லாதிருந்த சில பெரியோர்கள் காலடைவில் நமது நாட்டில் உதித்துக் கொண்டிருந்த படியால் தான் நம் நாடு இப்பொழுது இருக்கும் நிலையிலாவது இருக்கின்றது. அனது தேக

சுகத்தைக் கவனியாது நாட்டின் பெருமையையும் நன்மையையும் கருதி யாண்டு வந்தவர்களுள் சிவாஜி யொருவன். ஒரு ஊரில் ஒரு நல்லவனிருந்தால் அவனுக்காக மழைபெய்து கெட்டவனை சுபிக்ஷமாயிருக்கும்படி செய்யுமல்லவா? அப்படியே சிவாஜி மாதிரி ஒருவன் இறந்து போனாலும் அப்புறம் கொஞ்ச நாட்களுக்கு அவர்களுக்காகவாவது நாடுநன்றாக விருந்து வருகிறது.

இப்பொழுது சிவாஜி ஒரு படத்தை வைத்துக் கொண்டு சமீபத்தில் ஒருபித்தளை மெழுக்குவத்தி விளக்கு வெளிச்சத்தினால் பார்த்துக் கொண்டிருந்தான். சமீபத்தில் பிடிக்க வேண்டிய ஊர்களையும் போகவேண்டிய மார்க்கங்களையும் அண்டையிலிருந்த ஒரு கடிதாசியில் பேனாவில் மை தோய்த்துக் குறித்துக் கொண்டு சேவகன் உள்ளே வந்து யாரோ இருவர் அவசியமாக அவர்களைப் பார்க்க வேண்டு மென்று சொல்லுகிறார்களென்று சொன்னான். சிவாஜி அரண்மனை யொன்றும் பெரிதாக வைத்துக் கொள்ளவில்லைஒரு சிறு தோட்டமும் அதன் நடுவில் அவன் வீடுமிருந்தது. அதன் வாயிற்புரத்தில் நான்கு வேலைக்காரர்களிருந்தார்கள். அவர்கள் ஒருவனையும் சிவாஜியைக் கேளாமல் உள்ளே விடக்கூடாது. சிவாஜியோ ஒருவரையும் பார்ப்பதற்கு சாவகாசமில்லை யென்று சொல்லி யனுப்புவது வழக்கமே யில்லை. உள்ளே யிருந்து வெளியே வந்தான். சந்திர வெளிச்சம் வெகு ரமணீயமாக

வெள்ளி வெண்குடத்துப் பால் சொரிவது போற்
கள்ளவிழ் பூம்பொழி லிடையிடை சொரிய.

அப்பொழுது வெகு அழகாகவே யிருந்தது. இருவர் இரண்டு குதிரைகளின்றும் அப்பொழுது தான் கீழே யிறங்கி யிருந்தார்கள்.

"யார் அங்கே!"

"அபலூர்" என்றாள் ரௌஷினாரா.

தான் கேட்ட குரல் மாதிரி யிருக்கவே, சிவாஜி வாசற்படியினின்றும் கீழே யிறங்கி துணியைச் சரியாக விழுந்துப் போர்த்திக் கொண்டு சேவகர்களும் கூடவர சிவாஜி குதிரைகளண்டை நிற்கும் இருவர் சமீபத்தில் போய் நின்றான். உடனே ரௌஷினாரா தான் போட்டு மூடிக்கொண்டிருந்த துணியை யெடுக்கவே,

"ரௌஷினாரா!" என்று மெல்லக்கூப்பிட்டான்.

இது என்ன புதுமை? தனிமையாய் வந்தது. கூட வந்திருப்பது யார்? அவுரங்கசீப் தானோ?

ரௌஷினாரா தயங்கினாள். அவனைச் சற்று உற்றுப் பார்த்தாள்,—மலைம் அதை யெல்லாம் கவனித்து அவளைப் பார்த்து நகைத்தான்; மெல்லத் தலையை யாட்டிவிட்டு மெல்ல சற்றுத் தூரத்திலே போய் நின்று விட்டான். இருதயம் படபடக்க அவள் உடனே தனதன்பன் பக்கல் தாவினாள். சிவாஜி அவளைத் தனது கைகளில் ஏந்திக் கொள்ள அவன்

"கண்ணே! பார்த்தாயோ?" என்றான்.

"அவுரங்கசீபிடம் சொல்லி விட்டாயோ?"

"யாரிடம்?"

"உன் பிதாவிடம் கண்ணே! உன் பிதாவிடம்" என்று சொல்லி அவளுடைய இதழ் போன்ற உதடை முத்தமிட்டான்

"இனி நாம் ஆனந்தமாயிருக்கலாம். உன் பிதா அறிந்து கொள்ளுவார்.—வா! ரௌஸினா! "கண்ணே" என்று இன்னொரு தடவை கூப்பிடு. நீ அதைச் சொல்லிக் கேட்க எனக்கு வெகு ஆசையா யிருக்கின்றது." அவள் அவன் மார்மேற் சாய்ந்து கொண்டு அவன் கண்களைப் பார்த்துக் கொண்டு வெகு ரமணீயமாய்ப் புன் சிரிப்புச் சிரித்தாள்.

"எனக்குச் சரியாய்ச் சொல்லவராதே!" என்றாள். "நான் இன்னும் அப்பாஷையை நன்றாகக் கற்றுக்கொள்ளவில்லை. நான் நினைப்ப தெல்லாவற்றையும் உங்களிடம் சொல்லி விட்டால் நீங்கள் என்னைப் பைத்தியக்காரி யென்றன்றோ நினைப்பீர்கள். ஏனெனில் நான் நினைப்பதெல்லாம் பிறருக்கு வேடிக்கையாயும் புதிதாய் யிருக்கின்றது," என்று தயங்கினாள். உடனே அவள் முகம் வெளுத்து சற்றுபெரு மூச்சு விட்டு "அப்பா மகா பயங்கரம்."

"கண்ணே! எது பயங்கரம்?" என்று அவளிடம் நெருங்கி அவளைக் கட்டி யணைத்துக் கொண்டான்.

அவள் சற்று நேரம் அழுதாள். அப்புறம் "நான் அகப்பட்டுக் கொண்டது" என்று நடு நடுங்கிக்கொண்டு பேசியதை முழுவதும் முடிக்க முடியாமற் சொன்னாள். "எல்லாம் பறந்து போய் விட்டது. இனி எனக்குப் பயமில்லை. நீங்கள் எனக்குக் கிடைத்து விட்டீர்கள். அன்பே! இது ஆச்சரியமல்லவா? இது விசனகரமானதல்ல. அன்பே! உன் இருதயம் வெகு வேகமாய் அடிக்கின்றதே! நான் அவர்கள் கையில் அகப்பட்டுக் கொண்ட பொழுது நீ எங்காவா யிருந்தாய்? உன் மனம் எப்படித் துடித்தது. எனக்குப் பிரக்ஞையே யில்லாமற் போய் விட்டது. கண்ணே! பட பட

படவென்று அடிக்கின்றதே! எனக்குக் காது கேட்கின்றதே! என்ன வேகம்! இதோ இங்கே நான் தலை வைத்திருக்குமிடத்தில்" என்று தொட்டுக் காண்பித்தாள். அவள் மேலே பார்த்துத் தன்னுடைய சிறிய கமலக்கையினால் அவன் கன்னத்தை அன்புடன் தடவினாள். சிவாஜி! என்று கூப்பிட்டு அன்பே! நீ என்ன யோசிக்கின்றாய்? உனது கண் பளபளவென்று மின்னுகின்றதே! உன் கண்ணின் அழகை நீ யறிந்தாயோ?" என்றாள்.

"என்கண் அழகோ?" என்றான் எங்கேயோ மனத்தைச் செலுத்தியிருந்த சிவாஜி. மின்னல் போன்று மின்னும் அழகிய பேதை முகத்தைப்பார்த்து. வெகுநாளாக அடக்கி வைத்திருந்த அன்பு வெளியே புறப்படுவதற்குப் படும் கஷ்டத்தைக்கண்ணுற்றான்.

"எனக்கு அதுதெரியாது. உன்னைப்பார்த்தால் ஆகாயத்திலிருந்து அனுப்பப்பட்ட நக்ஷத்திரம் போன்றும் காணப்படுகிறாய். ரௌஷனாரா! என்முத்தே! உன்னைவரிக்க யோக்கியதையுள்ளவனாநான்?"

அவன்சத்தியமாகவே இவ்விதம் பேசினான். பேசும் பொழுது மரியாதையும் பயமும் கலந்த ஒரு அன்புடன் அவளைமுத்தமிட்டான். சற்றும் களங்கமற்றவும் படாடோபமற்றதுமான அவள்குணத்தையறிந்த யெவனுடைய ஆத்மா அவளை பக்தியுடையனும் அன்புடனும் நோக்காதிருக்கும்! ஆ! என்ன சத்யம்! தன்னுடைய வாழ்நாள் அவனுடைய தென்றன்றோ சொல்லிவிட்டாள்? அவன்யார்? நடுக்காட்டில் அவள் அவனை நாடிவந்திருக்க. அவளைச்சந்திரியில்விட்டுவிட்டுவந்தான். பகவானுடைய குளத்திலிருந்து பறிக்க